# தமிழ்க் குமரி




பாலபாரதி
ச. து. சுப்பிரமணிய யோகி

யோகியார் பதிப்பகம்
4, துரைசாமி முதலித் தெரு, நுங்கம்பாக்கம்,
சென்னை—34

# பொருளடக்கம்

## எம். பக்தவத்சலம்

தமிழக கல்வி, நிதி அமைச்சர் அவர்களின்

# மதிப்புரை

மகாகவி பாரதியார் மரபில் வந்த பைந்தமிழ்க் கவிஞர் திரு. பாலபாரதி ச. து. சுப்பிரமணிய யோகியார் அவர்கள் தெய்வ பக்தியும் தேச பக்தியும் நிறைந்த அறிஞர். கவிச்சக்கரவர்த்தி கம்பன் கண்ட கவிதைக் கடலில் மூழ்கி பல நன்முத்துக்களை எடுத்தவர். ஆங்கிலப் புலமையும் வட மொழிப் பயிற்சியு முள்ளவர்.

சுதந்திரப் போராட்டத்தில் தீவிரமாக உழைத்தவர். விடுதலைக்குப் பின் ஜனநாயகச் சிறப்புக்களை மக்களுக்குப் பாடியவர். இவர் தமக்கென வாழவில்லை: தமிழ் நாட்டுக்காகவே வாழ்ந்தவர்.

இவருடைய 'தமிழ்க் குமரி' என்னும் கவிதைத் தொகுதியை மூன்றும் பதிப்பாக நண்பர்கள் வெளியிடுவது குறித்து மகிழ்கிறேன். இவருடைய கவிதைகள் வெறும் வார்த்தைக் கோவையல்ல. இயற்கையின் எழுச்சியோடு பொழிந்த அமுத மழைத் துளிகள். நல்ல கவிதையின் இரகசியத்தை அவரே கூறுகிறார்:

"சொல்லினாலே கவிசொல்ல வந்தேன்
சொல்லில் அமிழ்தினை மெல்ல வைத்தாள்
கொல்லும் அமிழ்தினில் கூறவந்தேன்
கோடிக் கவிதைகள் ஊற வைத்தாள்"

என்று கவிதா தேவியின் நுண்கலையை விளக்குகின்றார். இந்நூலில் உள்ள "அகல்யா", "மேரிமகதலேனா", "உமர்கய்யாம்" போன்ற கவிதைகள் மிக மிக வளமும், வனப்பும், புலமையும் புதுமையும் படைத்தவை.

அமெரிக்க நாட்டு ஞானக் கவிஞன் வால்ட்விட்மனின் நூலை தமிழில் "மனிதனைப்பாடுவேன்" என்ற தலைப்பில் தந்திருக்கிறார்.

"கூத்த நூல்" என்ற ஆராய்ச்சிக் கலை நூலும் அவரது அரிய உழைப்பின் பரிசாக நமக்குக் கிடைத்துள்ளது.

இவரது நூல்கள் அனைத்தையும் தமிழர்கள் படித்துப் பயன் பெற வேண்டும். வாழ்வின் வேதனைகளை மறந்து கவிதை எழுதுகிறான் கவிஞன். நாம் அதைப் படித்தால் நமது வேதனைகளையும் மறந்திருக்க முடியும்.

இந்த நல்ல கவிஞருடைய நூல்களை ஒவ்வொரு நூல் நிலையத்திலும் வைத்து வாசகர்களுக்குப் பயன்படும்படிச் செய்வதே நாம் அவருக்குச் செய்யும் நன்றி.

ஆகஸ்டு 13, 1963

—எம். பக்தவத்சலம்

# முன்னுரை

தன்னலமில்லாத தேச பக்தர்களுக்கும் தற்புகழ்ச்சியில்லாத தமிழ்க் கவிஞர்களுக்கும் உண்மை பேசும் உயர்ந்தோருக்கும், விளம்பரத்தை வேண்டாத கலைஞனுக்கும் இந்த நாட்டில் எவ்வளவு கோரமான தண்டனை கிடைக்குமோ, அத்தனை துன்பத்தையும் துயரத்தையும், வறுமையையும் வேதனையையும் புன்சிரிப்போடு அனுபவித்து இந்தப் புண்ணிய பாரத நாட்டை விட்டு விடுதலை பெற்றுவிட்டார் நண்பர் யோகியார் அவர்கள்.

எவ்வளவு பெரிய கவியாயிருந்தால் தான் என்ன, எத்தனை பெரிய அறிஞராயிருந்தால்தான் என்ன? இந்த நாட்டில் இனி மேல் முன்னுக்கு வரவேண்டுமென்றால், ஜமீன்தார்களையும் மகாராஜாக்களையும் பாடிய முற்காலப் புலவரைப்போல் இன்றும் கால்கைப் பிடித்துக் கவி பாட வேண்டும். இல்லையேல் கவியும் இல்லை ஒரு மண்ணுமில்லை. தன்மானமுள்ள கவிஞன் தளர்ந்து கலங்கித் தான் கண்ட கனவுச் சமாதியிலே ஜீவன் முக்தியடைய வேண்டியதுதான். இந்நிலை மாற இதயப் புரட்சி வேண்டும்.

வாழ்க்கையின் சூதுவாது தெரியாமல், குறுக்கு வழியில் சென்று கோணற்புகழ் தேடாமல், தேட மனமில்லாமல் தனித்து நின்றே தமிழ்க் கவிக்குரிய தன்மையுடன், தறுகண்மையுடன் வாழ்ந்து தமது அறுபதாம் ஆண்டில் காலமாகிவிட்டார் யோகியார். வயதான தமது தாய், வசதியற்ற துணைவியார், அன்பான தம்பி இவர்களைவிட்டுச் சென்றுவிட்டார்.

"போதெல்லாம் பாட்டு, பொழுதெல்லாம் சங்கீதம்
யாதுக்கும் அஞ்சோம் அவனியெலாம் எம்உடைமை
சூதுக்கும் வஞ்சனைக்கும் சூட்சிக்கும் மாந்தர்செயும்
வாதுக்கும் மாமருந்து யாங்கள் செயும் வண்கவிதை"

என்று பாடிவிட்டு தமது வாழ்க்கையை ஒரு சோகக் கவிதையாக்கிக் கொண்டார்.

தமது நூல்களை இன்று புதிய உருவில் வெளியிட்டுக் காண வேண்டுமென்று துடித்தார். மக்கள் படித்தின்புற வேண்டுமென்று ஆசைப்பட்டார். அந்த ஆசைகூட நிறைவேறாமல் போய்விட்டார்.

இறந்தபின் அவர் ஆசையை நிறைவேற்றுகிறோம். "தமிழ்க் குமரி" எனும் இந்நூலை மூன்றாம் பதிப்பாக யோகியார் பதிப்பகம் வெளியிடுகிறது. இதற்கு முன் இரண்டு பதிப்புகள் வந்துள்ளன. முதற் பதிப்பு திரு. ப. ரா. அவர்கள் முயற்சியில் நவயுகப் பதிப்பகத்திலும், மறுபதிப்பு திரு. வி. ஆர். எம்.செட்டியார் அவர்கள் முயற்சியில், திருச்சி ஸ்டார் பிரசுரத்திலும் வெளி வந்தன.

இன்று யோகியார் குடும்பத்துக்கு அவர் விட்டுப்போன செல்வம் "தமிழ்க் குமரி" போன்ற சில நூல்கள் தாம்.

இந்தப் பதிப்பை எல்லாரும் வாங்கி கவிதையைப் பெருமை செய்தால் கவிஞர் குடும்பத்துக்கு உதவி செய்ததாகும். அவரது இதர நூல்களும் தொடர்ந்து வெளிவர வழி பிறக்கும்.

இந்த மூன்றாம் பதிப்பை அடக்கச் செலவுக்கும் குறைவாகவே பெற்று குறைந்த காலத்தில் முழு முயற்சியுடன் அச்சாக்கிக் கொடுத்த சுதேசமித்திரன் அச்சகத்துக்கு நமது நன்றி.

மதிப்புரை எழுதி உதவிய தமிழ்நாட்டின் கல்வி நிதி அமைச்சர் திரு. பக்தவத்சலம் அவர்கட்கு எங்கள் நன்றிகள்.

அன்புள்ள

**எஸ். டி. சுந்தரம்**

# முகவுரை

*காலஞ்சென்ற பால பாரதி ச. து. சு. யோகியார் ஒரு பரம்பரைக் கவிஞர். கருவிலே திரு உடையவர். காளி தேவியின் கருணைக்குப் பாத்திரமான கற்பனைக் கருவூலம். தம்பால் கவிதை பிறந்த கதையை அவரே கூறுகிறார்.*

*"எனது ஒன்பதாவது வயதில் காவியத் தேவியின் கோயிலுக்கு அழைத்துச் செல்லப்பட்டேன். கம்பனுக்கும் காளிதாசனுக்கும் காளமேகனுக்கும் கவிதை கொடுத்த தெய்வ அன்னையின் திருவடிகளிலேதான் அடியேனும் அர்ப்பணம் செய்யப் பட்டேன். அன்று முதல் இன்று வரை, அவளே என் கவிதைக்குத் தலைவி. கற்பனைக்கு நாயகி. காவியக் கடவுள். என் ஆருயிர் கோயிலின் ஆதார மூர்த்தம்" என்று சொல்லுவார். இதற்கேற்ப அவரது கவிதை ஒன்றில், "பாடும் குரல் நான்; பாடுவாள் காளி" என்கிறார்.*

*யோகியாரின் தந்தை திரு. துரைசாமிஅய்யா. தாயார் திருமதி மீனாட்சி அம்பாள். தந்தை சங்ககிரியில் பாங்கராக இருந்தார். பன்மொழிப் புலவர். எல்லோருக்கும் நல்லவர். ஊரில் அறநிலைப் பாதுகாவலராய்ச் சிறந்து விளங்கினார். தம் மகனை பாரிஸ்டர் படிக்க இங்கிலாந்து அனுப்ப வேண்டுமென்று ஆசைப்பட்டார். ஆனால், தனது 38-வது வயதில் திடீரென்று மறைந்துவிட்டார். அவரது மறைவிற்குப் பின் வறுமையுற்ற யோகியாரின் குடும்பம் இன்றும் அவ்வறுமையிலிருந்து மீட்சி பெறவில்லை.*

*திரு யோகியாரின் கவிதா குரு அவரது சிறிய தந்தையான காலஞ்சென்ற பால பாரதி எஸ். வெங்கடேச அய்யர். ஆழ்ந்தடங்கி வாழ்ந்த அறிஞர். உபாசனா நெறியைப் பின்பற்றியவர். இசையறிவும் பெற்றவர். "ஆகாசம் தேர் ஊரும்" அன்னையை நினைத்து கவிதைகள் இயற்றிக் கொண்டிருப்பார். ஏழையாகவே வாழ்ந்தார். "பொன்னில்லை; மணியில்லை; புடவை அணிகளில்லை; புனுகு ஜவ்வாதில்லை; புகுந்திட வீடில்லை" என்று தேவியிடம் தம் நிலையை தெரிவிப்பார்.*

யோகியாரின் ஒன்பதாவது வயதில், நாள் பார்த்து கோள் பார்த்து, கைக்குறியும், மெய்க்குறியும் சோதித்து ஐயரவர்கள் தமையன் மகனை அம்பிகையின் மகனாக்கி "பால பாரதி" என்ற பட்டம் சூட்டி நடுநிசியில் அன்னை காளியின் அருமையான விஞ்சையை உபதேசித்தார். அன்னை அருள் கூர்ந்து "கற்பனையும் தேவக் கனவுகளும் காட்சிகளும் ஒப்பனையும் காட்டி உயர்ந்த வனாய்ச்" செய்துவிட்டாள் என்று சொல்லுகிறார்.

யோகியாருக்கு "பளிங்கனைய கவிக்கரசன் கம்பனென்னும் தேவன்" தான் கவிதை வானில் துருவ நட்சத்திரம். கம்பனோடு இதயத்தால் சங்கமித்து கவிதைச் சாகரத்தில் முக்குளித்து அவனது சொல்லணியும், பொருளணியும் சுரமும் தரமும் கைவரப் பெற்றார்.

கவிஞர் முதல் தேவியை,

"வெள்ளிவான் பாற்கடலில் வேதத்தனந்தன் மேல்
அள்ளும் மதிவிழியாள் அம்பிகை என் ஆணைழகி"

என்று பாடுவதில் "ஆணழகி" என்ற சொல்லாட்சி நினைக்க நினைக்க இன்பம் பயக்கும்.

வானரசன் அகல்யாவின் கண்ணழகில் மயங்கி மையல் கொண்டதை

"கண்பாற்கடல் மிதக்கும் கரும்பாவைத் தோணிமிசை
பெண் பாக்கியக் கரை பிடிக்க விழைந்தானே!"

என்று பாடுவதில் சொல்லழகும் பொருளழகும் காண்கிறோம்.

கம்பனிலே ஊறித்திளைத்த கவிஞரின் பாடல்கள் பல கம்பன் பாடல்களையே நினைவுபடுத்தும்.

கம்பன் லட்சுமி தேவியை,

"செந்தாமரைப் பொகுட்டில் செம்மாந்து வீற்றிருக்கும்
நந்தா விளக்கை நறுந்தார் இளங்கொழுந்தை
முந்தா உலகும் உயிரும் முறையே
தந்தானை நோக்கினள் தன்னைப் பொன்றில்லாதான்"

என்கிறார்.

யோகியார் முதல் தேவியை,

"செந்தாமரைத் தவிசில் தேன் விசிறும் வாரிதியில்
நந்தா விளக்கென்ன ஞானக் கொழுந்தாகி
சிந்தாமணிக் கவிதை தெள்ளமுதாம் வாணித்தாய்
வந்தாள் இவ்வையகமும் வானகமும் வாழ்த்தெடுப்ப"

என்கிறார்.

யோகியாரின் அகல்யா ஒரு புதிய, அழகிய, அற்புத சிருஷ்டி. அகல்யாவில் ஓசைதரும் இன்பம் கூட உவமையிலா இன்பம்.

யோகியாரின் "உமர்கய்யாம்" "Fitzerald"–ன் ஆங்கில உமர்கய்யாம் போல் சிறந்து விளங்குகிறது. "மேரி மக்தலின்" மலையாளக் கவி வள்ளத் தோலின் "மேரி மக்தலின்" போல் அழகொளிருகிறது. பின்னும் அவரது உள்ளமெல்லாம் உணர்ச்சி எல்லாம் கவிதையில் நீர்வீழ்ச்சி ஆகும் காட்சியை "**கண்மணி ராஜத்தில்**" காணலாம்.

"தேசம் எலாம் சுற்றும்
சிறு பறவை சின்னேரம்
வீசும் கிளை ஒன்றில்
வீற்றிருந்து போவதுபோல்"
அப்பன் இவன் ஏழை
அரைக் காசுக் கஞ்சிக்கில்லை
இப்பரிசு வேண்டாம்
எனத் துறந்து போயினையோ?"

திரு. யோகியார் கவிஞர் மட்டுமல்ல, ஆழ்ந்த அறிஞர். சிறந்த தேச பக்தர். உயர்ந்த பண்புள்ளவர். குழந்தையுள்ளம் படைத்தவர். எல்லோருக்கும் நல்லவர்.

1963–ம் ஆண்டு ஜூலைத் திங்கள் 24–ம் நாளன்று அமரராகி விட்டார். 1960–ம் ஆண்டு முதல் நானும் யோகியாரும் நெருங்கிப் பழகிவிட்டோம். என் குடும்பத்தில் ஒரு அங்கத்தினர்போல் ஆகி விட்டார்.

அவரது கவிதைகள் தமிழ் மக்கள் மனத்தில் என்றும் நின்று நிலவும். அந்த அழியாக் கவிதைகளிலே,

"உள்ளத்துணர்ச்சியின் வெள்ளம் பொங்கும்
அள்ளும் கற்பனை அமுதம் துள்ளும்
காவியக் கனவுகள் கதிரொளி வீசும்"

8-8-1963

**எஸ். நல்லபெருமாள்**

# பதிப்புரை

பாலபாரதி ஸ்ரீ யோகியார் எழுதியுள்ள பாடல்கள் அநேகம். இவைகளில் சில அவ்வப்பொழுது பத்திரிகைகளில் வெளிவந்தன ; பல இதுவரை வெளிவரவில்லை. இவற்றைத் தொகுத்து ஒரு நூலாக வெளியிடவேண்டும் என்று அவருடைய நண்பர்களான சிறந்த தேச ஊழியர்கள் விரும்பினர். அதன் விளைவே இந்த நூல்.

இந்தக் கவிதை மலரில் உமர் கயாம் என்ற பாரசீகக் கவியின் 101– பாடல்கள் மொழிபெயர்த்து அமைக்கப்பட்டிருக்கின்றன. அவற்றில் சில பாடல்களைப் படித்தாலே உமருடைய தத்துவங்கள் தெளிவாகப் புலப்படும். அவர் பெரிய வான சாஸ்திரி, கணிதத்தில் நிபுணர். ஆயினும், மனித விதியின் சிக்கலை மட்டும் தம்மால் உணர்ந்துகொள்ள முடியவில்லை என்று கதறுகிறார். சில இடங்களில் கடவுளைப்பற்றிக் குறிப்பிட்டிருந்த போதிலும், கடவுளையோ, அவர் திறமையையோ அவர் போற்றி வழிபட்டதாகத் தெரியவில்லை. ஓரிடத்தில், 'நின் பாவம் மன்னித்தோம், எம் பாவமதும் மன்னிப்பாய்! ' என்று ஆண்டவனுக்கு மன்னிப்பு அளிக்கிறார்! கடவுளுக்குப் பதிலாக அவர் விதி ஒன்றையே உறுதியாக நம்புகிறார். ஸ்ரீ யோகியார் அநேக அம்சங்களில் உமர் கயாமை ஒத்திருப்பவர். ஆனால், அந்தப் பாரசீகப் புலவருடைய "விதி"க்குப் பதிலாக, இவர் பராசக்தியை நம்புகிறவர். "வெல்க காளி" என்றே இவர் எதையும் தொடங்குகிறார். காளி பூஜையும் செய்துவருகிறார். பூஜை முடிந்த பிறகு, எத்தனை நண்பர்கள் வந்து பாடச் சொன்னாலும், பாட்டுப் புனைந்து, பாடிக் கொண்டேயிருப்பார்.

ஸ்ரீ யோகியாருடைய சொந்த ஊர் சேலம் ஜில்லாவிலுள்ள சங்ககிரி. அது பாறைகளும் சுனைகளும் கூடிய ஊர். அங்கே, சிறு வயதில், இவர் ஆடவும் பாடவும் போதிய வசதிகள் அமைந்திருந்தன. இவருடைய சிறிய தந்தையாரான பாலபாரதி ஸ்ரீ. வெங்கடேச ஐயர் இவருடைய ஒன்பதாவது வயதிலேயே பாடல்

களைச் சொல்லிக்கொடுத்து வந்தார். அவர் பாட்டை ஆரம்பித்துக் கொடுப்பதும், இவர் முடிப்பதும், இவ்வாறு சின்ன வயதிலேயே ஆனந்தமாகப் பாடிப் பாடி இவருக்குப் பழக்கமாகி விட்டது.

* * *

இந்நூலிலுள்ள 'ருபயாத்', 'மது—மது', 'வசந்தம்', 'காதல் தேன்' ஆகியவை பாரசீகப் பாடல்களின் மொழி பெயர்ப்பு. மற்றவை எல்லாம் ஸ்ரீ யோகியாரே பாடியவை.

அகல்யாவைப் பற்றி ஆசிரியர் எழுதியுள்ள சிறு காவியமும் இந்தத் தொகுதியில் சேர்க்கப்பட்டிருக்கிறது. அகல்யாவின் பழைய கதையை இவர் புதிதாகப் பாடியிருக்கிறார்.

வேதத்தில் அகல்யாவைப் பற்றிப் பல சூசகமான கருத்துக்கள் இருக்கின்றன. அவள் ஒளி, ஆகவே குற்றம் அற்றவள் என்பது அவற்றுள் மிகவும் முக்கியமான கருத்து. பின்னர் கலப்பையால் பண்படுத்தப்படாத பூமி தேவி அகல்யா என்னும் கொள்கையும் ஏற்பட்டது. பிறகு இவ்விரு கொள்கைகளும் ஒன்றாகப் பிணைக்கப்பட்டன; இப் பிணைப்பே இதிகாசத்தில் அகல்யாவின் கதையாக வெளிப்படுகிறது.

அகல்யா பிரமனது ஹோமகுண்டத்தில் உதித்தவள் என்பது புராணம்; அதாவது "புகையற்றாள், தழலற்றாள், புண்ணியம் மிகுந்த ஒளியாளுள், மாசற்ற வீர்யத்தோடு கூடியவள்" என்ற ஒளியைப் பற்றி வேதம் கூறும் வாக்கிய இலக்கணத்திற்குக் கலா ரூபமான இலக்கியம் அகல்யா. அவள் ஒளிமகள்; ஒளிக்குக் குற்றம் ஒரு காலத்தும் இல்லை. அவள் ஒளி ஆகையால், ஒரு நொடிக்குள் உலகம் முழுவதும் பரவக் கூடியவள். ஆகவே பிதா ஸ்தானத்திலுள்ள பிரமன், உலகத்தை எவன் முதலில் சுற்றி வருகிறானோ அவனுக்கே அகல்யாவை மணப்பதாகப் பணயமிடுகிறான். இப் பணயத்தை இருவர் ஏற்றுக்கொண்டனர் — ஒருவன் வானரசாகிய இந்திரன், மற்றவன் மண் முனியாகிய கோதமன்.

மேகநாதனாகிய இந்திரன் அகல்யாவின் விளையாட்டுத் தோழன். ஏனெனில், மேகம் ஒளியைக் காதலிக்கிறது; அதனால் விளக்கமுறுகிறது; அதனைத் தனக்குள் மறைத்துக்கொள்ளுகிறது. ஒளியும் அதனோடு உறவாடுகிறது, குலாவுகிறது, அதன் மடியில் தவழ்ந்து விளையாடுகிறது. இந்த வித்துக்களை வைத்துக்கொண்டு கவிகள் கதைகள் கட்டியிருக்கிறார்கள் என்று யூகிக்கலாம்.

அகல்யாவைப் பற்றி முன்னல் ஏற்பட்டிருந்த கதைகளில், முதலில் வால்மீகியும், பிறகு கம்பனும், சமீப காலத்தில் வெள்ள கால் ஸ்ரீ வெ. ப. சுப்பிரமணிய முதலியாரும் எழுதிய மூன்று கதைகளை முக்கியமாகக் குறிப்பிடலாம். இம் மூன்று கதைகளையும் முதலில் கவனிப்போம் :

1

கௌதம மகரிஷியின் ஆசிரமம் மிகவும் வனப்பு வாய்ந்த இடத்தில் அமைந்திருந்தது. அதன் அழகைக் கண்டு வியந்து தேவர்களும் அடிக்கடி அங்கே வந்து தங்கிப் போவது வழக்கம். ஒரு ரிஷிக்கு இப்படிப்பட்ட இடம் கிடைத்ததே என்று அவர்களுக்குப் பொறாமையும் உண்டாயிற்று. அந்த ஆசிரமத்தில்தான் கௌதமர் தவம் செய்தார்.

தேவேந்திரனுக்கும் அகல்யாவுக்கும் வெகு நாளாகவே காதல் உண்டு. அந்தக் காதல் இந்திரனை எப்போதும் தாங்க வொண்ணுமல் எரித்துக்கொண்டே இருந்தது. ஒரு நாள் கௌதமர் வெளியே போன சமயத்தில், தேவர்கோன் ரிஷி வேஷம் பூண்டு ஆசிரமத்துக்குள் வந்தான். "அழகியே! இது தகுந்த சமயமில்லை என்பது உனக்குத் தெரியும். இருந்தாலும் என் மனம் உன்னை ஆவலிக்கிறது" என்றுன் அகல்யாவைப் பார்த்து.

வந்தது தேவராஜா என்று தெரிந்ததும், அகல்யா பெரு மகிழ்ச்சி கொண்டு அவனேடு இன்புற்றிருந்தாள். அந்த இன்பத்தில், "தேவர் நாயக! இன்றே என் எண்ணம் நிறைவேறிற்று. இங்கிருந்து விரைவில் வெளியே போய்விடும். ரகசியம் வெளிப்படாமல் பார்த்துக்கொள்ளும்!" என்றுள்.

இந்திரன் புன்முறுவலோடு, "வந்த மாதிரியே திரும்பிப் போய்விடுவேன்" என்று கூறி நடந்தான். அவன் ஆசிரமத்தைத் தாண்டுவதற்குள் கௌதமர் அங்கே வந்து சேர்ந்துவிட்டார். கௌதமர் என்றுல் இந்திரனுக்கு எப்போதுமே நடுக்கம். அவர் கையில் தர்ப்பம், சமித்துகள்; உடம்பில் ஈர ஆடை; கண்களில் தீயைக் கக்கும் ஜ்வாலை. அவரைக் கண்டு இந்திரன் நடுநடுங்கினன். அவன் முகம் வெளுத்தது. மகரிஷி அவன் உள்ளத்தைத் தெளியக் கண்டுவிட்டார். அவனைப் பேடியாகும்படி சபித்தார்.

அகல்யாவை நோக்கி, "நீ செய்த குற்றத்துக்காகப் பல வருஷங்கள் கடுந்தவம் புரியவேண்டும். காற்றையே பருகி, அன்னுகாரமில்லாமல், உள்ளம் கசிந்து உருகிப் பச்சாத்தாபப்பட்டு,

யார் கண்ணிலும் படாமல் இங்கே வசிப்பாயாக. இந்த இடத்திற்கு ராமன் வருவான்; அப்போது உன்தீவினை அகலும்'' என்று சொல்லிவிட்டு, கௌதமர் இமயமலைக்குத் தவம் செய்யப் போனார்.

பின்பு வெகு காலம் கழித்து, விசுவாமித்திரரைத் தொடர்ந்து ராமன் அந்த ஆசிரமத்துக்குள் போகிறான். அவன் பின்னே செல்லுகிறான் லக்ஷ்மணன். அங்கே அவர்கள் அகல்யாவின் தூய வடிவத்தைக் காண்கிறார்கள். இயற்கையான அவளுடைய எழில் பல வருஷத் தவத்தினால் பன்மடங்கு ஒளி வீசுகிறது. "ஜனங்களாலும் தேவர்களாலும் அசுரர்களாலும் பார்க்க முடியாதவள், சிருஷ்டிகர்த்தாவினால் மிகவும் சிரமப்பட்டுப் படைக்கப்பட்டவள், பனி மேகங்களினால் மூடப்பட்ட மதி போலவும், நீரில் தோன்றும் கதிரவன் போலவும், புகையினால் சூழப்பட்ட அக்கினி சிகை போலவும் இருந்த அவள், ராமன் முன்பு மங்கள வடிவோடு காட்சியளிக்கிறாள்.''

ராமலக்ஷ்மணர்கள் அவளை வணங்குகிறார்கள். அவள் அவர்களுக்குச் சத்காரம் செய்ய, அவர்கள் அதை ஏற்றுக்கொள்ளுகிறார்கள். தேவர்கள் மலர் மழை பொழிகின்றனர். விண்ணில் துந்துபி முழக்கம் கேட்கிறது. அப்ஸர ஸ்திரீகள் கூட்டங் கூட்டமாக நின்று, தவத்தினால் தூய்மையுற்ற அகல்யாவுக்கு மங்களம் பாடுகிறார்கள். கௌதமர் தம் பத்தினியை அங்கிகரிக்கிறார். பின்பு ராமலக்ஷ்மணர்கள் மிதிலையை நோக்கி விசுவாமித்திரரின் பின்னே போகிறார்கள்.

இது வால்மீகி சொல்லும் அகல்யாவின் கதை.

## 2

முன்னொரு நாள் மான்விழியாள் அகல்யாவைத் தேவேந்திரன் விரும்பினான். அவள் நயன வேலும், மன்மதனின் சரமும் இந்திரன் மேல் பாய, அக் காம நோயைத் தீர்க்க அவன் வழி தேடலானான். கௌதமருக்குப் பிரிவை உண்டாக்கி, அவர் உருவமே கொண்டு, ஒரு நாள் ஆசிரமத்தில் நுழைந்தான்.

அவனோடு "காமப் புது மண மதுவின் தேற"லை நுகர்ந்து கொண்டிருக்கையில், கணவன் இல்லை என்பதை அவள் தேர்ந்தாள். தேர்ந்த பின்னும் இது தகுதியில்லை என்று அதை விலக்கவில்லை. இந்தத் தருணத்தில் முனிவரும் முடுகி வந்தார். இந்திரன் அங்கே பூனையாகப் போகலானான். அவன் செய்ததை அறிந்து,

அவனைச் சுடர் விழியால் நோக்கி, சுடுசரம் போன்ற சொல்லால் முனிவர் சபித்தார்.

அவன் போன பின்பு மெல்லியலாளைப் பார்த்து, "விலைமகளனைய நீ கல்லாய்ச் சமைவாயாக" என்று சபித்தார் ரிஷி. கல்லாவதற்கு முன்பு அவள், "பிழை பொறுத்தல் பெரியோர் கடனுயிற்றே, எனக்கு விடிவு காலம் இல்லையா?" என்று கேட்டாள். அதற்கு முனிவர், "தசரத ராமனென்பான் கழல் துகள் கதுவ, இந்தக் கல் உருத் தீரும்" என்ருர்.

இந்திரன் சாபமும் மாற்றப்பட்டது. ஆனல் தையல் கல்லாகவே கிடந்தாள்.

மிதிலைக்குப் போகும் வழியில், விதேக நாட்டின் எல்லைப் புறத்தில் விசுவாமித்திரர் ராமலக்ஷ்மணர்களோடு தங்குகிருர். அங்கே ஒரு வெற்றிடத்தில் நெருங்கின மேடாக வளர்ந்து தோன்றிய ஒரு கருங்கல்லை அவர்கள் காண்கிருர்கள். ராமனுடைய திருவடித் தூள் பட்டதனுல், பேதைமை மயக்கு நீங்கி மாசற்ற வடிவை அடைகிற ஜீவன்போல, பண்டை வண்ணமாய் அகல்யா உயிர்பெற்று நிற்கிருள். மிக்க மகிழ்ச்சியோடு, பக்கத்தில் ஒரு மின்னற் கொடிபோல் விளங்குகிருள்.

"இவள் யார்? ஏன் இப்படிக் கல்லாய்க் கிடந்தாள்? அன்னை போல இருக்கும் இவள் முற்பிறப்பில் செய்த தீவினையால் நிகழ்ந்ததா, அல்லது நடுவில் நிகழ்ந்ததா?" என்று ராமன் கேட்க, விசுவாமித்திரர் மேற்கூறிய அகல்யாவின் கதையைக் கூறி, தாடகை வதத்தில் அவன் கை வண்ணத்தையும், இங்கு அவன் கால் வண்ணத்தையும் கண்டதாகப் போற்றுகிருர். அதைக் கேட்ட ராமன், "அம்மா! கௌதமர் அருள் உண்டாகும்படி நடந்துகொள். நடுவில் நேர்ந்த துன்பத்தை நினைந்து வருந்தாதே" என்று கூறி, அவளுடைய எழிற் பாதங்களை வணங்குகிருன்.

இதற்குள் கௌதமரும் அங்கு வந்து சேருகிருர். "நெஞ்சினுல் பிழைப்பிலாளை ராகவன் முன்னை வண்ணமாகச் செய்துவிட்டான். இவளை ஏற்றுக்கொள்ள வேண்டும்" என்று விசுவாமித்திரர் சொல்ல, கௌதமர் அவ் வார்த்தைகளை ஏற்றுக்கொள்ளுகிருர். மாசறு கற்பின் மிக்க அந்த அணங்கினை முனிவர் கையில் தந்து அம் மூவரும் அப்புறம் அகன்றனர்.

இது கம்ப சித்திரம்.

## 3

தேவலோகத்தில் இந்திரன் கொலு வீற்றிருக்கிறுன். அவன் உள்ளத்தில் உணர்ச்சிகள் குமுறுகின்றன. அகல்யாவிடம் பெருங் காதல் கொண்ட அவன்,

'அவள் உருவே நோக்க அவள்குரலே கேட்க
அவள் அருகே எப்போதும் ஆர,—அவள்நிழலே
போலப் பரி வொடவள் போம்எங்கும் போக, யான்
சாலப் பிரியமுளேன் தான்.'

'வேகின்றேன்! வேகின்றேன்! வெவ்வியதோர் தீப்பற்றி
வேகின்றேன்! அந்தோ! விளிந்தேனே!—வேச,
நரகத்தீத் தானும் நலியுமோ இந்த
விரகத் தீப் போல வெகுண்டு?'

என்று அவள் பிரிவாற்ருமல் கதறி ஓலமிடுகிருன்.

பிறகு அவன் அங்கிருந்து அகன்று, கெளதம முனிவரின் வேஷம் பூண்டு, கெளதமரின் வீட்டுப் பக்கமாகப் போய்க் கோழி போல் கூவினுன். முனிவரும், காலைக்கடன் கழிக்கும் காலம் வந்துவிட்டதென்று எண்ணி, வெளியே போனுர். அப்போது முனி வேஷம் பூண்ட இந்திரன் ஆசிரமத்துக்குள் போகிருன்.

அகல்யா முனிவரே மீண்டும் வந்துவிட்டார் என்று கருதி வரவேற்கிருள். இந்திரன் அவள் கரத்தைப் பிடிக்க, அப்போது அவன் பற்றிய முறை கெளதமர் பற்றும் முறையினின்றும் வேறு யிருப்பதைக் கண்ட அவள், வஞ்சத்தை யுணர்ந்து, “சீ, விட்டிடு” என்று கூறிப் பதைத்துப் பின்னடைகிருள்.

'மேகமின்றி மின்னின்றி வெள்ளிடிமேல் வீழ்ந்தாற்போல்,
மாகொடுந் துன்பாம் விபத்து வந்ததே!'

என்று வருந்தித் தவிக்கிருள். தன் கற்பு அழிந்துபோகும் என்று நிச்சயித்து அவள் அன்றிரவே சாகத் துணிகிருள். அவன் செய்யத் துணிந்த செய்கை தகாதது என்று நியாயம் கூறி உபதேசித்து, “வீர, எனை விட்டுவிடு!”, “மின்னற் குலிசீ, விடு!” என்று அவனை வேண்டுகிருள்.

அவனே, தன் காதலின் தன்மையை அவளுக்கு விளக்கி யுரைத்து,

'என்னுயிரை விட்டிடினும், என்னுயிரின் மிக்கினிய
நின்னை விடல் ஒண்ணுதால், நேருதலே !'

என்றும், அவள் தன் கருத்துக்கு இணங்கியே தீர வேண்டுமென்றும் கூறுகிறான். பெண்பாலரிடத்தில் வலி செலுத்தல் தகாது என்று அவள் சொல்ல, இந்திரன்,

'இன்னே நீ சம்மதித்தால், யார் அறிவார்? உன் கொழுநன்
உன்மீதே சந்தேகம் ஒன்றுமுறான் ;—மின்னே,'

'நின் இசைவை யான் தூற்ற நோக்கிலேன் ; நீ தூற்றாய் ;
பின் இதனை எங்ஙன் பிறர் அறிவார்?'

என்று பசப்புப் பேச்சுகள் பேசுகிறான். அப்போது அவள் அந்த நியாயங்களின் போலித் தன்மையை விளக்கி அவனுக்கு இணங்க மறுக்கிறாள். அதற்கு அவன்,

'வெற்பினுச்சி நின்றுருண்டு வீழ்பெரிய பாறையிடை
நிற்புறக் கைகொண்டு தட்கல் நேருமால்'

என்று பதில் சொல்லுகையில், அவள் தன் வலியற்ற தன்மையை உணர்ந்து, மூர்ச்சையுற்று அறிவிழந்து விழுகிறாள். அந்நிலையிலும் "செயத்தக்கது ஈது, செயத்தகாதது ஈது என்று யுத்தத்தும் காதலிலும் உண்டோ?" என்று நினைத்துத் தேவேந்திரன் தன் வேட்கையைத் தீர்த்துக்கொள்ளுகிறான்.

கங்கையாடச் சென்ற முனிவர், நடந்த சூதை உணர்ந்து, மீண்டும் ஆசிரமத்துக்குத் திரும்புகிறார். ஆசிரம வாசலில், 'மேலாம் தன் இல்வாழ்வின் மாண்பை இரித்த மகவானைக்' கூர்ந்து நோக்குகிறார். அவனோ, அவரைக் கண்டதுமே உட்கி, அடங்கி, ஒடுங்கி, நடுநடுங்கி, வெட்கி, மெலிந்து, வெளிறி, ஒளி மட்கி, உலைந்து, குலைந்து, அலைந்து, மலைகிறான். மிருகத்தினும் கேடாய்ப் பிணத்தைத் தழுவுவது போல, மூர்ச்சையுற்றுக் கிடந்த அகல்யாவைக் கற்பழித்த அவனைக் கௌதமர் சபிக்கிறார். பின்பு தேவர்கள் வேண்ட அவர் அதை ஒருவாறு மாற்றுகிறார்.

அகல்யா தான் முன்பு என்ன பாவம் செய்து இப்பழி வந்ததோ என்று வருந்துகிறாள்.

'வஞ்சன் உடல் நிறையை மாற்றினன் அன்று உன்றன்
நெஞ்சின் நிறை சிறிதும் நீங்கிலது'

என்று முனிவர் அவளுக்கு ஆறுதல் கூறுகிறார். தான் அவருக்கு அடிமையாயிருத்தற்கும் தகுதியில்லையே என்றும், தான் கல்லா

கத் தகுந்தவளே என்றும் அவள் கூறி, அவர் சாபத்தை அன்போடு ஏற்கிறாள். அவள் கல்லுருவம் நீங்கி மீண்டும் தம் மனைவி ஆவாள் என்று முனிவர் அருளுகிறார்.

பின்பு விசுவாமித்திர ரிஷியுடன் ராமன் அவ்வனத்தை அடைந்தபோது, அவனுடைய பாத பரிசத்தால் அவள் கல்லுருவம் நீங்கித் தன் தொல்லுருவம் பெறுகிறாள். கௌதமரும் அவளை ஏற்றுக்கொள்கிறார்.

இது தமிழறிஞரான ஸ்ரீ வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்கள் தம் "அகலிகை வெண்பா"வில் அளித்துள்ள புதிய கதை.

* * *

ஸ்ரீ யோகியாருடைய கதையில் முந்திய மூன்றிலிருந்தும் மாறுபடும் இடங்கள் அநேகம் இருக்கின்றன. இந்திரன் மாறு வேடம் பூண்டு வருவதற்கு முன்பே ஒரு நாள் அகல்யாவைக் கண்டு தன் காதலை உரைக்கிறான். அப்பொழுது அம் மாதரசி, "கற்புக் கனல் நான்; காமச் சிறு புழு நீ!" என்று அவனை உதாசினம் செய்து ஒதுக்குகிறாள். பின்னர் இந்திரன், கௌதமன் போல் தோன்றிப் பர்ணசாலைக்குள் போகும்பொழுது, "கற்றை இருள் நடுவோர் கதிர்போலக் கண் வளர்ந்த" அகல்யாவை அண்டுகிறான். "தீங்கு தடுப்பாரில்லை, தீமை புரிந்துவிட்டான்." வால்மீகி கூறுவதுபோல், இங்கு, "தேவராஜா என்று தெரிந்ததும் குதூகலத்தோடு சம்மதித்தாள்" என்பது இல்லை. "காமப் புது மண மதுவின் தேறல்—ஒக்க உண்டு இருத்தலோடும் உணர்ந்தனள்" என்று கம்பன் கூறுவதும் இங்கு மாற்றப்பட்டிருக்கிறது. அகல்யா, "என்றுமில்லாப் பேராசை என் கணவர் கொண்டாரே!—இன்று கண்டேன் பேரின்பம்!" என்று தான் இணங்கியிருந்தாள். இதுபோலவே பின் கதையிலும் சில மாறுதல்கள் இருக்கின்றன.

பொதுவாகப் பார்க்குமிடத்து, ஸ்ரீ யோகியார் படைத்திருக்கும் அகல்யா அப்பழுக்கில்லாதவளாயும், கௌதமர் அருவருக்கத் தக்கவராயும் இருக்கிறார்கள். பல்லாயிரம் வருஷங்களாக ஆடவர் பெண்மைக்கு இழைத்துவந்த அநீதியே உருவெடுத்து வந்தவராகக் கௌதமர் காணப்படுகிறார். அவர் விபரீதமான ஒரு சிருஷ்டி என்று கருதுவதற்கில்லை. சாபம் கொடுக்கும் சக்தியிருந்தால், தற்காலத்தில்கூட, எத்தனையோ கோடி ஆடவர்கள் கௌதமரைப் போலவே சாபமிடுவார்கள்.

வால்மீகியின் அகல்யா வழுக்கி விழுந்த ஒரு சகோதரி. ஆயினும் தன் தவறை உணர்ந்து, தவங்கிடந்து, உள்ளத் தூய்மை பெற்று; ஒரு பிறப்பிலேயே புனிதமான மறுபிறப்பைப் பெறுகிருள். கற்பே வழக்கமாயுள்ள கன்னியர் சொக்கத் தங்கம் என்ருல், தடுமாறி விழுந்து எழுந்த அகல்யா புடம் போடப்பட்டு ஒளிரும் தங்கம். கம்பனுடைய அகல்யா நெஞ்சினுல் பிழையிலாள்; தீமையினின்றும் எளிதில் தன்னை விடுவிக்க முடியாத ஒரு நிலையில்தான் அவள் தன் செயலை உணர்கிருள். ஸ்ரீ முதலியார் அவர்களுடைய 'அகலிகை வெண்பா'வில் காணப்படும் அகல்யா, ஒரு பாவமும் அறியாத பேதை. இதில், பிணம் போல் மெய் மறந்து அயர்ந்து கிடந்த அகல்யாவையே இந்திரன் தீண்டுகிருன். ஸ்ரீ யோகியாரின் அகல்யா, நதியிலிருந்து முனிவன் திரும்பி வந்து, இந்திரன் தன் மாறுவேடத்தை மாற்றிக்கொண்டு வெளியே ஓட யத்தனிக்கையில்தான், அவன் அந்நியன் என்பதை அறிகிருள். அவள், உடற் குற்றமும் உளக் குற்றமும் இல்லாதவள். இதை ரகுவீரனுகிய ராமன் கௌதமனிடம் சொல்லுவதாக அமைத்திருக்கிறது:

> **'கண்ணுல் உனைக் கண்டாள்,**
> **வானரசைக் காணவில்லை ;**
> **எண்ணத்து உனை ஏற்ருள்.**
> **வானரசை ஏற்கவிலை......'**

மேலே கூறப்பட்டிருக்கும் நான்கு கதைகளிலும் எத்தனையோச் சிறப்புகள் இருக்கின்றன. ஒன்றுக்கொன்று உயர்வு தாழ்வு கற்பிப்போர் கற்பிக்கட்டும். இங்கு நாம் குறிப்பிட வேண்டியது ஒன்றுதான்: நான்கும் ரஸித்து அநுபவிக்கத் தக்கவை.

*　　　*　　　*

மேரி மக்தலேனே 112 – பாடல்களாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. காமாந்தகாரத்தில் மூழ்கிக் கிடந்த மேரி, கிறிஸ்து நாதரின் வருகையால், புனர்ஜன்மம் எடுக்கும்வரை கூறப்படுகிறது. இக்கதையை மிக விரிவாக இன்னும் எழுதவேணும் என்பது ஆசிரியருடைய அவா.

பாரசீக மொழிபெயர்ப்புகளில், ஹபீஸ், அத்தர் என்ற பெரும் புலவர்களுடைய பாடல்கள் சில சேர்க்கப்படிருக்கின்றன. பாரசீக நாட்டில் இவர்கள் பெரும் புகழ் பெற்றவர்கள். ஹபீஸ்

கி. பி. 1389 வரை வாழ்ந்திருந்ததாகத் தெரிகிறது. அவரே பின்னுல் அநேகம் கவிஞர்களுக்கு வழிகாட்டியாக விளங்கிஞர். 'ருபயாத்' பாடிய **உமர் கயாம்** அவர்களுடைய வரலாறு அடுத்தாற்போல் தனியாக எழுதப் பெற்றிருக்கிறது. ஆங்கிலத்தில் "ருபயாத்" பற்பல தினுசாக, பற்பல விலைகளில், கண்ணைக் கவரும் முறையில் பதிக்கப் பெற்றிருக்கிறது. இதிலிருந்தே ஆங்கிலம் கற்றவர்கள் அதை எவ்வளவு பாராட்டுகிருர்கள் என்பது புலனுகும். 'ருபயாத்' பாடல்களில் வரும் சில பெயர்களுக்கும், விஷயங்களுக்கும் விளக்கமாக, அநுபந்தம் ஒன்று நூலின் கடைசியில் சேர்க்கப்பட்டிருக்கிறது.

இந்நூலில், அநேக இடங்களில் பாடல்களின் சீர்களைப் பிரிக்காமல், பொருளுக்குத் தக்கபடி சொற்களைப் பிரித்து அமைத்திருக்கிருேம். சிறிது கவனித்துப் பார்த்தால் சந்தம் எளிதில் புலப்படும். சொற்களின் சந்திகளும் கூடியவரை பிரிக்கப் பட்டிருக்கின்றன.

'தமிழ்க் குமரி"யின் பெயரால் வெளிவரும் இக்கவி மாலையைத் தமிழ் அன்பர்களிடம் மகிழ்ச்சியுடன் சமர்ப்பிக்கிருேம்.

**பதிப்பாசிரியர் ***

---

* முதற் பதிப்புக்கு ப. ரா. எழுதிய பதிப்புரை

# உமர் கயாம்

பாரசீக நாட்டில் நைஸாப்பூர் என்ற ஊரில் இமாம் மொவாபிக் என்ற ஒரு பெரியார் இருந்தார். அவர் ஜனங்களுடைய நன்மதிப்பையும் மரியாதையையும் வெகுவாகப் பெற்றவர். அவரிடம் குரானும் மதநூல்களும் பயிலும் எந்தப் பையனும் முன்னுக்கு வந்து சுகமாக வாழ்வான் என்பதில் மக்களுக்கு அசையா நம்பிக்கை இருந்துவந்தது.

மூன்று மாணவர்கள் இமாமிடம் ஒன்ருகப் பயின்ருர்கள். மூவரும் புத்திசாலிகள்; இயற்கையில் உயர்குணங்கள் அமையப் பெற்றவர்கள். ஒரு நாள் அவர்களில் ஒருவன் மற்ற இருவர்களிடம், "இமாமிடம் படிக்கும் எந்த மாணவனும் அதிர்ஷ்டசாலியாகப் போவது நிச்சயம். ஒருகால் நாம் மூவருமே அதிர்ஷ்டசாலிகளாகாவிட்டாலும், நம்மில் எவனுவது ஒருவன் நல்ல நிலைக்கு வருவதுபற்றிச் சந்தேகமேயில்லை. ஆகவே நம்மில் எவன் உயர் பதவியை அடைந்தாலும், அவன் மற்ற இருவர்களுக்கும் தன் அதிர்ஷ்டத்தையும் சுகத்தையும் பங்கிட்டுக் கொடுக்க வேண்டும்" என்ருன். மூவரும் இதற்கு ஒப்புக்கொண்டு தமக்குள் அவ்வாறே ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டனர்.

பின்பு வருஷங்கள் பல ஓடின. அம்மூவரில் ஒருவனுகிய **நிஜாம்-உல்க்-முல்க்** என்பவன், தன் நாட்டிலிருந்து வெளியேறி, கஜினியிலும் காபூலிலும் பிரயாணம் செய்தான். அங்கிருந்து திரும்புகையில், சுல்தான் ஆல்ப் அர்ஸ்லன் என்ற அரசனின் அரசாங்கக் காரியாலயத்தில் அவனுக்குப் பெரிய பதவி அளிக்கப்பட்டு, நாளடைவில் அவன் சுல்தானுக்கு மந்திரியாளுன்.

சில வருஷங்கள் கழித்து அவனுடைய இரண்டு, பள்ளித் தோழர்களும், பழைய ஒப்பந்தப்படி, அவனுடைய அதிர்ஷ்டத்தில் பங்கு கேட்க வந்தனர். அவர்களில் ஒருவர் **உமர் கயாம்** மற்றவன் **ஹஸன்-இப்-ஸப்பாஹ்** என்பவன்.

ஹஸன் அரசாங்கத்தில் தனக்கு முக்கியமான ஸ்தானம் வேண்டுமென்று கோரினன். மந்திரியின் வேண்டுகோளுக்கு

இணங்கி, சுல்தான் அவனை ஒரு பெரிய அதிகாரியாக்கினன். நாளடைவில் ஹஸன் தனக்குப் பேருதவி செய்த மந்திரியிடமே பொறுமைகொண்டு, அவனைப் பகைத்து வந்தான். மந்திரிக்குத் தீங்கிழைக்க வேண்டும் என்று செய்த முயற்சியில் ஹஸன் தோல்வியுற்று, அதிகாரத்தை இழந்து, ஊரூராக அலைந்து திரிந்தான். பிறகு அவன் இஸ்மேலியர்கள் என்ற பாரசீக ஜாதியார்களுக்குத் தலைவனகி, மகம்மதிய உலகத்தையே ஒரு கலக்குக் கலக்கி வந்தான். கடைசியில் அவனுக்கு உபகாரம் செய்த நிஜாம் உல்-முல்கே அவன் கத்திக்கு இரையாகி முடிந்தான், என்றல் அவனுடைய தீக்குணத்திற்கு எல்லை ஏது?

உமர் கயாமும் மந்திரியாகிய தம் பள்ளித் தோழன் நிஜாமிடம் தம் பங்கைக் கேட்க வந்தார்; ஆனல் அவர் தமக்குப் பட்டமோ பதவியோ வேண்டுமென்று விரும்பவில்லை. "உன் அதிர்ஷ்டத்தின் நிழலிலே எனக்கு ஒரு மூலையில் வசிக்க இடம் கொடுத்து விடு. நான் அங்கே இருந்துகொண்டு என் சாஸ்திர ஞானத்தைப் பரப்புவேன். உன் ஆயுள்-ஆரோக்கியத்தைக் குறித்துக் கடவுளிடம் பிரார்த்தனை செய்வேன். இதுவே நான் உன்னிடத்திலிருந்து வேண்டும் பெரிய வரம்!" என்றர். மந்திரி எவ்வளவோ வேண்டியும், அவர் எந்தப் பதவியையும் பெற ஆசைப்படவில்லை. உண்மையில் உமர் பற்றற்றவர் என்பதைக் கண்ட மந்திரி, அவரை மேலும் வற்புறுத்தாமல், நைஸாப்பூர் பொக்கிஷத்திலிருந்து அவருக்கு வருஷத்துக்குப் ஆயிரத்து இருநூறு மித்கல்கள் (பொன் நாணயங்கள்) கொடுக்கும்படி ஏற்பாடு செய்தான்.

உமர் கயாம் பதினோராம் நூற்றண்டின் மத்தியில் தோன்றியவர்; கி. பி. 1123-ல் அவர் மறைந்ததாகச் சொல்லப்படுகிறது.

உமர் கயாம் வான சாஸ்திரத்தில் மகா நிபுணர். **மலிக் ஷா** சுல்தானக இருந்தபோது அவர் சுல்தானிடம் வந்து அரிய சன்மானங்களைப் பெற்றர். மலிக் ஷா புதிதாகப் பஞ்சாங்கம் கணிக்க வேண்டுமென்று கருதியபொழுது அதற்காக நியமிக்கப்பட்ட எட்டுப் பேர்களடங்கிய சபையில் உமரும் ஸ்தானம் பெற்றர். அவர் தான், ஜலாலி சகாப்தத்தை ஆரம்பிப்பதற்குக் காரணமாக இருந்தார். 'ஜீஜி மலிக் ஷாஹி' என்ற வான சாஸ்திர விஷயமான கணக்குகள் கொண்ட ஒரு புத்தகத்தையும் அவர் இயற்றினர்.

'கயாம்' என்பது அவருடைய புனைபெயர். 'கூடாரம் கட்டுபவன்' என்பது அதன் பொருள். நிஜாம்-உல்-முல்கினிடம்

புகல் பெற்றுச் சுதந்திரமாக வாழ்வதற்கு முன்பு கூடாரம் கட்டுவது அவருடைய தொழிலாக இருந்திருக்குமென்று யூகிக்க லாம். ஏனெனில் அந்தக் காலத்திய கவிகள் தம் தொழில்களுக்கு ஏற்பவே புனைபெயர்கள் வைத்துக்கொண்டிருந்தார்கள். ஒரு வேளை கூடாரம் கட்டும் தொழிலை உமரின் தந்தையார் செய்து வந்திருக்கலாம் என்று சிலர் நினைக்கிறார்கள். உமர் கயாம் பாடல் கள் புனைந்ததோடு, பயிர்த் தொழிலும் செய்து வந்தார் என்பது அவர் கவிதைகளிலிருந்து தெரிகிறது.

உமரின் சிஷ்யர்களில் ஒருவரான **க்வாஜா நிஜாமி** என்பவன் அடிக்கடி அவரிடம் வந்து பேசிப்போவது வழக்கம். அவனு டைய சொந்த ஊர் ஸமர்கந்த். ஒரு நாள் அவர்கள் இருவரும் தோட்டத்தில் சம்பாஷித்துக் கொண்டிருந்தபொழுது, உமர் அவ னிடம், 'வடக்கத்தி காற்று ரோஜா மலர்களைக்கொண்டு வந்து தூவும் இடத்தில் என் சமாதி இருக்கும்' என்று சொன்னாராம். எத்தனையோ வருஷங்கள் கழித்து க்வாஜா மீண்டும் நைஸாப்பூ ருக்குச் சென்று தன் ஆசிரியரின் சமாதியை அங்கே கண்டான். அது ஒரு தோட்டத்துக்கு வெளியே இருந்தது. பழங்கள் குலுங் கும் மரக்கிளைகள் தோட்டத்து மதிள் சுவரில் படர்ந்திருந்தன. அவருடைய சமாதி மறைந்து போகும்படியாக மரங்கள் மலர் களைச் சொரிந்து கொண்டிருந்தன.

உமர் கயாம் நாஸ்திகவாதி. அவருடைய 'ருபயாத்' பார சீகக் கவிதையில் ஒரு புது மாதிரி. இந்த உலகமே அவருடைய சொர்க்கம். விதியில் அவருக்குப் பூரண நம்பிக்கையுண்டு. விதியே அவருக்குக் கடவுள். ரோஜா மலர்கள், திராட்சை ரஸம், அந்த ரஸம் ததும்பி வழியும் பாத்திரம், அதை ஊற்றும் ஜீவனுள்ள பெண், இவைகளுக்குள் அவருடைய வேதாந்தம் பரவியிருந் தது. மதுவைப் பற்றி அவர் பாடியிருப்பதற்கு மேல் பாட முடி யுமா என்பது சந்தேகம். அவர் ஒரு சமயம் மதுவே குடிப்ப தில்லை என்று சபதம் செய்துகொண்டாராம். புத்தி தெளிவாக இருந்திருந்தால் அப்படிச் சபதம் செய்திருக்க மாட்டாராம்.

'விட்டுவிடுவோம் கள்ளே,
வேண்டாம்!' எனப் பலகால்
திட்டமிட்டேன்—எனினும் அப்போ
தெளிவோடு இருந்தேனே?'

என்று அவர் தம்மைத் தாமே கேட்டுக் கொள்ளுகிறார்.

உமர் மது, மாதர் என்றெல்லாம் பாடியிருப்பதற்கு வேதாந்தபரமான உட்பொருள் வேறு உண்டு என்று சிலர் சொல்லுவர்.

உமர் கயாமைப் பற்றிச் சொல்லும்பொழுது அவருடைய 'ருபயாத்'தை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த **எட்வர்ட் பிட்ஜெரால்ட்** என்பவரை அவசியம் குறிப்பிட வேண்டும். இவருடைய காலம் 1809—1883. இவர் 1859ம் ஞு 'ருபயாத்'தை ஞர். அவருடைய இங்கிலீஷ் 'ருபயாத்' எல்லையற்ற புகழ் குப் பின்னுல் ராஸெட்டி, ஸ்வின்பர்ன் முதலிய ஆங்கிலக் கவிகள் அதைக் கண்டெடுத்துப் பாராட்டிய பிறகு அது உலகப் பிரசித்தமடைந்தது. நமது ஹிந்துஸ்தானத்தின் சம்ஸ்கிருத நூல்களை **எட்வின் ஆர்நால்ட்** ஆங்கிலத்தில் பிரசித்தப்படுத்தியது போல், பாரசீக இலக்கியத்தை பிட்ஜெரால்ட் பிரபலப்படுத்திஞர். அவருடைய இங்கிலீஷ் "ருபயாத்" எல்லையற்ற புகழ் பெற்று விளங்குகிறது.

உமர் கயாம் எழுதிய 'ருபயாத்' 800–வருஷங்களுக்குப் பிறகு இப்பொழுதுதான் தமிழில் முதல் முறையாக முழுதும் வெளிவருகிறது.





# தமிழ்க் குமரி

பங்கயத்துக் குமரிமுனைப் பாதம் சேர்த்தாள்,
பசும்பொன் முடி வேங்கடத்தைப் புனைந்தங்
[கார்த்தாள்,
பொங்கி வரும் காவிரியை இடையில் கோத்தாள்,
புரமூன்றும் கடற்கன்னி பணியப் பார்த்தாள்,
மங்கலம் சேர் மேலைமலைச் செங்கோலுற்றாள்,
மலர் மொட்டு லங்கை யெனும் மகளைப் பெற்றாள்,
எங்கள் குலத் தெய்வம், தாய்,— எமக்கு வீடு,
இளமை குன்றாக் கன்னி எங்கள் தமிழர் நாடு!

2

காவிரியின் பாய்ச்சலெலாம் கருப்பஞ் சோலை,
கழனியெலாம் கதிர்முத்தும் செந்நெற் சாலை,
பூவிரியும், மதுப் பொழியும், வண்டு தேடும்
பொங்கரெலாம் குயிலினங்கள் வதுவை கூடும்,
தாவி வரும் முகில் பார்த்து மயில்க ளாடும்,
தமனியத்துப் பாறைகளில் சுனைகள் நீடும்,
பாவிரியும் கவிவாணர் புகழ்ந்து பாடும்
பசுந் தமிழ்நாடு ஈடில்லை எந்த நாடும்!

3

சந்தனமும், சண்பகமும், தேக்கும், பாக்கும்,
சாமை, தினைப் பயிர்வகைகள் தலையைத் தூக்கும்,
கொந்தளவு மாங்கனியும், தீம் பலாவும்
குளிர் நறவத் தொடு குழைந்து மதுக் குலாவும்
பந்தரெலாம் கிளி குயில்கள் கதைகள் பேசும்,
பசிய மந்த மாருதத்தின் வாடை வீசும்,
இந்து வந்து மரக்கிளைகள் ஊடு பார்க்கும்
இளந் தமிழ் நாட்டுக்கீடு எந் நாடு வாய்க்கும்?

வேறு

இளங்கோவன் சிலம்பு முரல் இன்னிசையில் தவழ்ந்து,
இணைக் குறள் முப்பாலுண்டு குறுகு நடை பயின்று,
களங்கமிலாப் பக்தியினர் பன்னிருவர் நால்வர்
கற்கண்டுச் சொற்கோவைக் கவிமாலை புனைந்து,
பளிங்கனைய கவிக்கரசன் கம்பனெனும் தேவன்
பண்ணிவைத்த காவியத்தின் பசும்பொன் முடி தரித்த
இளங் குமரி தமிழ்த் தாய்தான் என்றென்றும் பாடும்
இளந் தமிழ்நாடு ஈடொப்ப தில்லை எந்த நாடும்!

## பாடு நீ என்பார்

பாடு நீ என்பார்; எங்ஙனம் பாடுவேன்?
உண்மை அறிந்திலர் உலகத்து மக்கள்;
பாடும் குரல் நான், பாடுவாள் காளி.

அன்னையே நின்னுடை யமுதக் கவிதைக்
கடலில் யானொரு சிறுநுரைக் கலக்கம்;
தேனிசை வெள்ளத்து ஈப்போல் தியங்கும்
யானோ பாடுவேன், யாரிதை யறிவார்?

வீணை நான் நீயவ் வீணையை மீட்டுவாய்
குழல் நான் ஊதும் குமுதவாய் நினது
எழுதுகோல் நான் நீ எழுதும் காதலி
என்னைப் பாடென்பார், இதனை அறியார்.

யானொய்க் கவிதை யமைப்பான் வேண்டிக்
காரிகை கற்றுப் பேரிகைத் தட்டாய்
வெட்டி வார்த்தைகள் கொட்டி முழக்கி
வெறியனாய் வறியனாய் வீணனா மெனக்கும்
நீயருள் செய்தாய், நெஞ்சுள் புகுந்தாய்;
கவிதை மலர்ந்தது, கனவுகள் பூத்தன:
என்னைப் பாடென்பா ரிதனை யறியார்.

நீயே கர்த்தா நானுன் கருவி
நீயே நெஞ்சக நித்திய விளக்கு
நீபாட் டிசைப்பாய் நான் கேட்டிசைப்பேன்
என்னைப் பாடென்பார் இதனை அறியார்.

# கவிதை ஊற்று

*1*

சொல்லினாலே கவி சொல்ல வந்தேன்,
சொல்லில் அமுதினை மெல்ல வைத்தாள்;
கொல்லும் அமிழ்தினில் கூற வந்தேன்,
கோடிக் கவிதைகள் ஊற வைத்தாள்.

*2*

மண்ணில் இன்பங்களைப் பாட வந்தேன்,
வானின் இன்பங்கள் கொண்டாட வைத்தாள்;
விண்ணின் இன்பங்கள் இசைக்க வந்தேன்,
வேத முடிவை அசைக்க வைத்தாள்.

*3*

காசுக்கும் சோற்றுக்கும் பண் இசைப்பேன்,
காதல் அமுதத்தின் விண் அசைத்தாள்;
நீசக் குணமுடை எந்தனுள்ளே அவள்
நீடித் திருப்பதற்கு ஆசை கொண்டாள்.

# கொடி வணக்கம்

புன்னாக வராளி - ஆதி

பல்லவி

வாழ்க மணிக்கொடி பாரதர் மெய்க்கொடி
வாழ்கவே—அதை
வந்து பணிந்து மகிழ்ந்திட வீரர்கள் சூழ்கவே!

சரணம்

1. வானக நோக்கித் தலை நிமிர்ந்தாடிய காட்சியே
- எங்கள்
மக்களி னுசைக் கனல் விளக் கேந்திய மாட்சியே!
ஞானக் களத்தினில் நல்லற மேடையிற் பூத்ததாம்
- உம்பர்
நாட்டின் விடுதலை காட்டுங் கொடியினை வாழ்த்து
வோம்!

2. செம்மையினு லெங்கள் செம்மை விளக்கிய செங்
கொடி - பச்சை
வண்மையினு லுளத் தண்மை விளக்கிய
வண்கொடி
வெண்மையி லெம்முயிர்க் காரிருள் வாட்டிய
வெண்கொடி - மூன்று
விண்ணிறத்தா லான்மத் திண்மை படைத்திடும்
விண்கொடி!

3. கொச்சை யடிமைக் குறைபடும் கோழைக
ளஞ்சவே - கொடுங்
கூற்று மெதிர் கொளு மாற்றல் படைத்தவர்
விஞ்சவே!
உச்சியின் மேரு மலை சிகரந்தனிற் பாருமே
- தோன்றும்
உன்னத பாரதச் சீர்க்கொடி வாழ்த்துவம்
வாருமே.

# சர்தார் வல்லபாய் படேல்

(இரங்கற்பா)

வல்லவனே வல்லவற்கும் நல்லவனும் காந்திமகான்
சொல்லவனே யறத்துணையாந் தூயவனே
போயினையே!

கரும்பு மொழிபேசிக் கவடுசெயும் வஞ்சகருக்
கிரும்பு மகனுயிருக்கு மேற்றமின்று போயிற்றே!

வீண்வார்த்தை பேசாமல் வீறுப்புக் காட்டாமல்
மாண்பார்ந்த திண்செயலின் மாவீரம் பொன்றியதே!

காந்திமுனி வளர்த்த கருணைப்பயிர் தழைக்கப்
போந்தசுடர் வேலிப் புதுமையின்று போயிற்றே!

மறப்போர் செய் வீரர்களோ மாநிலத்திலே பலராம்
அறப்போர் செய் வீரனுனையல்லாமற் கண்டிலமே!

திண்மையினுற் போரிடுவார் தேசமெலாந் தானுண்டிங்
குண்மையினுற் போரிடுவா ருனையன்றிக் கண்டிலமே!

காந்திமகா னுணைக்கடவாப் படைத்தலைவா!
சாந்த நெறித்தருமச் சர்தாரே போயினையே!

நமதுகொடி மேலேற நாகபுரிப் பட்டினத்தில்
திமுதிமெனு மன்னியரின் தீமையெதிர்த்
தோங்கினையே!

கத்தியெடுத் தாருக்குங் கருணைவர வேநேர்மைச்
சக்தியெடுத் தாயெங்கள் சர்தாரே போயினையே!

ஈட்டிமுனைக்கெதிரா யீசனருட் செம்படையைக்
காட்டி யெதிர்த்தவனைக் காலன் கவர்ந்தானே!

அன்புப் படை கொண்டே யகிம்சைக் கவசமுடன்
துன்பப் படை வீட்டும் துணிவின்று போனதுவே!

போராண்மை வீரமெலாம் போக்கற்றுப் போ
யொழியச்
சீராண்மை நேராண்மைப் பேராண்மை தீர்ந்ததுவே!

பர்தோலிப் படைத்தலைவா! பாரதரின் தனித் தலைமைச்
சர்தாரே யின்றெம்மைத் தவிக்கவிட்டுச் சென்றுயே!

மலை கலங்கி ஞலுந்தன் மனங்கலங்கா மாட்சியிஞன்
அலையடங்கிப் பனியுறையு மாழியாப் போஞனே!

வீரச் சுதந்திரத்தின் வெற்றிகண்டான் காந்திமகான்
ஆரச் சுதந்திரத்திற் கணையிட்டாய் நீயன்றே?

உன்னை யிழந்தோமே யுயிரிழந்த தொத்தோமே
அன்னை யெங்கள் பாரதத்தா யாண்மை யகன்றதுவே!

கண்ணீரே கம்பலையே கவலையாம் புண்ணீரே
உண்ணீரங் குன்றுத வுயர்வீரம் போயிற்றே!

மண்ணகத்தார் வாழ்வெல்லாம் வானகத்தாற்கேற்கலையே
விண்ணகத்தார் வினைதீர்க்க விரும்பியுனைக் கூவினரோ?

வெம்படைக்கே யஞ்சாத வீரவுனைக் கண்டயமன்
தம்படைக்கே சர்தாராயத் தரவுன்னைக் கொண்டானே?

முன்போன காந்திமுனி முரணுற்ற தேவருக்கே
யன்புநெறி காட்டவுனை யன்போ டழைத்தாரோ?

பாரதத்தாய் மேலோங்கப் பரமனுடன் வாதாடிச்
சீர்பெறவே நீயாகச் சென்றனையோ யாரறிவார்?

யாதுமறியோம்நாம் ஆனுலுந் தீராத
காதலினு லெங்களுக்குக் கண்வறண்டு போயிற்றே.

என்னசொல்லி யேதுபய னென்றுலு மெம்முடைய
மன்னுதுயர்க் கடற்கு வரம்பிடுதல் சாத்தியமோ?

இன்னுமெங்க ளாசையெல்லா மீசனருளாலிங்கே
பின்னுமவ தரித்தேநீ பிழைதீர்க்க வாராயோ.

# முதல் தேவி

1

பாரில்லை, விண்ணில்லை, பகிரண்டம் யாவுமில்லை,
நீரில்லை, நெருப்பில்லை, நீண்டதொரு காரிருளில்
யாருமில்லா வேளையில் இவ்வண்டமெலாம் [உண்டாக்க
வேரில்லா வித்தாகி வினையில்லாது இருந்தோய் நீ.

2

மூலத்து வித்தாகி, மூன்று கவடாய் முளைத்த
நீலக் கருக்கிருட்டு நின்மலமே! நின்னுடைய
சீலச் சிவந்த ஒளிச் செம்மையிலே செந்திருவாம்
காலைக் கதிர் தோற்றும் காவியத்துப் பெண் வந்தாள்.

3

செந்தா மரைத் தவிசுத் தேன் விசிறும் வாரியிலே
நந்தா விளக்கென்ன ஞானக் கொழுந்தாகிச்
சிந்தா மணிக் கவிதைத் தெள்ளமுதாம் வாணித் தாய்
வந்தாள்இவ் வையகமும் வானகமும் வாழ்த்தெடுப்ப.

4

வெள்ளிக் கதிர் சுருக்கி விரிந்த இருட் பெட்டியிலே
கொள்ளிக் கண் தீயுமிழக் குளிர்ந்த மதி [வைத்தவளாய்,
அள்ளித் தெளித்த முத்தத் தாடை புனைந்தவளாய்,
கள்ளத் துருத்திரையாம் கன்னியாய் நின்றாய் நீ.

5

காலையிலே இன்பக் கதிராய்க் கலந்ததுவும்,
மாலையிலே மோன மயக்கத்தில் ஆழ்ந்ததுவும்,

மேலும் நடுப்பகலில் மின்னொளியாய் மேவியதும்
வாலைச் சிறுமி செய்த மாமாயப் பகட்டன்றோ!

6

முத்தேவி யர்க்கும் முதல் தேவி, மூவுலகும்
பித்தேற்றி வைக்கும் பேயாட்டப் பெருந்தேவி,
எத்தேவர் தேவர்க்கு எவர் தேவர் என்றிடுவார்
அத்தேவர் தேவர்க்கு அவர் தேவராய் வருவாள்.

7

காலக் களத்தினிலே, கண்ணற்ற பாழினிலே,
சூலம் சுழற்றிடுவாள்; சுடுகாட்டுப் பேய்களெலாம்
கோலங் கொழுந்துவிட்டுக் கோளங்க ளாயுருள
ஞாலம் படைத்தாள் வான் நண்ணும் சுடர்கள்
[செய்தாள்.

8

வெள்ளி வான் பாற்கடலில், வேதத்து அனந்தன்
[மேல்,
அள்ளும் மது விழியாள் அம்பிகை என் ஆணழகி
கொள்ளைத் திருமகளாய்க் கோமளங்கள் காட்டிடவே
துள்ளுஞ் சுடர்களெலாம் மோகனமாய்ச்
[சூழ்ந்தனவாம்.

9

கள்ளப் புகை காணுக் காவியத்து வெண்ணெருப்பின்
தெள்ளித் தெளித்த இதழ்த் தேன் விசிறும் பூவணையில்
வெள்ளத்துப் பாயும் இசை வீணை விரல் தடவக்
கள்ளக் கருமாயை கழன்றோடிப் போனதுவே.

10

கன்னங் கருக்கிருட்டுக் கார்மேகக் காளியம்மா!
மின்னலினுல் வாள்சுழற்றி வெற்றிப் பறையிடித்துக்
கன்னலொடு செந்நெல் இந்தக் காசினி யெல்லாம்
[வளர்க்கும்
உன்அருட்குக் கோபத் துருவமுற்ற தென்னேயோ?

11

கோபத் தழலாய்க் கொதிப்போடு கொந்தளிப்பாள்;
பாபத் தழல் கருகிப் பரவசங்கள் சூழ்ந்தனவே!
தீபத் தழலாய்த் தினகரியாய்த் தேன் பொழிவாள்;
கூபம் கடலாகும் கோமளமாய்ப் பாய்ந்ததுவே!

12

கக்கிருட்டில் ஜோதிக் கதிரவனும் கதிரொளியில்
மிக்க திருவுடைய வெண் மதியாம் வீசிவரும்
திக்குருட்டும் சூறையினில் தேனமைதி அவ்வமைதி
சுக்குநூறு ஆக்க வரும் சூறை எங்கள் காளியம்மன்.

13

அப்படியும் இப்படியும், ஆம்படியும் போம்படியும்,
எப்படியும் ஆட்டிவைப்பாள் என்னம்மை; என்னுயிரில்
கற்பனையும் தேவக் கனவுகளும், காட்சிகளும்,
ஒப்பனையும் காட்டி உயர்ந்தவனுய்ச் செய்துவிட்டாள்.

14

போதுக்கும் பாட்டு, பொழுதெல்லாம் சங்கீதம்,
யாதுக்கும் அஞ்சோம், அவனியெலாம் எம் உடைமை;
சூதுக்கும், வஞ்சனைக்கும், சூட்சிக்கும், மாந்தர் செயும்
வாதுக்கும் மாமருந்து யாங்கள் செயும் வண் கவிதை.

# பலி

கூட்டுக்குள்ளே, மனக் காட்டுக்குள்ளே, புல
வேட்டைக்குள்ளே சிக்கிப் பேய் போலவே,
பூட்டைத் திறக்கத் தெரியாமல் மலப்
பொந்துக்குள் வாழ்வதை வேண்டிலனே.

சாத்திரமாம், ஏதோ கோத்திரமாம், நெஞ்சில்
மாத்திரம் பொய்யை வளர்த்திடுவார் ;
மாத்திரைப் போதும் மரணம் வராத தோர்
சூத்திரம் மட்டும் தெரிந்ததில்லை.

உச்சிக்கு மேலந்த மச்சுக்குள்ளே பொன்
அச்சாணி மேலுள்ள மச்சினியைக்
கச்சுக்குள்ளே சென்று கண்ணுக்குள்ளே மூடக்
காதல் நெஞ்சம் வழி காட்டிடுமோ?

எட்டுச் சாண் வீட்டுக்குள் மட்டக் குதிரையின்
ஈராறு காலும் பிடித் தடைத்துக்
கட்டிக் கருப்பாயி சந்நிதியில் கிடா
வெட்டிச் சமைத்திடப் போவேனோ?

ஓங்காரக் கோட்டையில் ஆங்காரத் தேவதை
ராங்கியோடு ஆட்சி புரிவதனால்,
தூங்காமல் தூங்கி ரீங்காரத் தேவியும்
சொத்தை என்றென்னை விலக்கிவிட்டாள்.

மலைக் குறத்தியைக் காணச் சென்றேன், மாய
மடுக் குழியினில் வீழ்ந்துவிட்டேன் ;
கலைக் குறத்தியும் சொன்ன' தெல்லாம் வெறும்
கதையாய்க் கனவாய்ப் போச்சுதடா !

கண்டதே காட்சியாய்க் கொண்டதே கோலமாய்க்
காசினி தன்னில் அலைந்துவிட்டேன் ;
கண்டதைக் கண்டித்துக் கொண்டதை துண்டிக்கும்
காரணச் சேதி கிடைத்திடுமோ ?

வெள்ளைக் கலைமகள் பாட்டுத் தந்தாள், காம
விஞ்சைக் குலமகள் கேட்டுகந்தாள் ;
கள்ளக் கருமணிக் காளியம்மன் ஞானக்
காதல் அணைப்பினில் கூடுவளோ?

குய்யத்து முக்கோணப் பாம்பதனை நெற்றிக்
கோயிலுக்குள்ளே விரட்டி விட்டால்,
மையத்துக் கோபுர வாயிலிலே அவள்
மன்மத நாடகம் பார்த்திடலாம்.

அம்பரக் காட்டினில் பம்பரமாடி
அகண்டமும் அண்டமும் ஆக்கிடுவாள் ;
உம்பர் பணியத் திகம்பர மானவர்
உள்ளத்துக் குள்ளே ஒளிவிடுவாள்.

பட்டணம் யாவும் பறிகொடுத்து, அந்தப்
பட்டணக் காரரை வெட்டிவிட்டால்,
வெட்ட வெளியினில் மொட்ட மச்சுமேலே
விந்தைக் குமாரி விளங்கிடுவாள்.

நெற்றிக்கு நேரே புருவத் திடையினில்
நூலேணி மீதேறிப் பார்த்திடுவாய் ;
பற்றுக்குப் பற்றாய் ஒளிவிடும் மந்திரம்
பச்சைக் குறத்தி நடம்புரிவாள்.

எண்ணெ யில்லை, அகல் கிண்ணி யில்லை, திரி
ஏதும் இல்லாமல் எரியுதடா ;
கண்ணுமில்லை காணக் காதும் இல்லை கேட்கக்
கையும் இல்லை அதைக் கட்டுதற்கே!

மண்டலம் விண்டலம் யாவையுமே அந்த
மன்மத ஜோதியில் மாய்ந்ததுவே ;
கண்டக் கருப்பாயி கோயிலிலே என்னைக்
கத்தியால் வெட்டிப் பலி கொடுத்தேன்.

# சக்திக் கூத்து

கூத்தாடுவோமே – சக்திக்
கூத்தாடுவோமே !
சாத்திரக் கந்தலைத் தூக்கி யெறிந்து,
சாதிப் பிணக்கைத் தவிடெனப் போக்கி,
கோத்திரச் சூழலை வெட்டிக் களைந்து,
நேத்திரங்கள் இமைப்பில்லாது பேய் போலக்
– கூத்தாடுவோமே !

மண்ணை உதைத்தந்த வானில் எழும்பி;
மந்த மாருதச் சுழற் பரி ஏறி,
கண்ணை விளக்கும் பரிதி பிடித்து, வான்
காவினில் எங்கணும் ஓட்டி மகிழ்ந்து நாம்
– கூத்தாடுவோமே !

வானி லிருந்திந்த மண்ணில் குதித்து,
வான்மதி தன்னைப் பூச் செண்டாய்ப் புடைத்து,
வான்நதி கங்கைக் குமுறலில் பாய்ந்து,
மாசக்தி வேல்சக்தி வேல்சக்தி என்று நாம்
– கூத்தாடுவோமே !

சங்கடப் பூதங்கள் யாவும் அழிந்தன,
சங்கீத கானம் கரை புரண்டோடுது,
எங்கணும் பேரொளி பொங்கிக் குதிக்குது,
எட்டுத் திக்கும் சதி மத்தளம் கொட்டுது !
– கூத்தாடுவோமே !

புத்தர் பிரான், கைலைத் தேவன் திடுக்குற,
பொங்கிய பாற்கடல் மங்கை நடுங்குற,

சித்தர், பக்தர், முக்தர், யாவரும் துணுக்குறச்
சிங்கத்தில் ஏறிச் சிரிப்பவள் முன்பு நாம்
— கூத்தாடுவோமே !

வானம் இடிந்தது, வையம் மடிந்தது,
மோனப் பரவெளி மோகனம் சூழ்ந்தது,
ஞானக் கடலுக்கு நாயகி தோன்றினள்,
நம் பவம் வெம்பிணி யாவும் அழிந்தது !
— கூத்தாடுவோமே !

காலம் கடந்தது, சூலம் சுழன்றது,
மூலக் கடவுளர் மூவரும் வீழ்ந்தனர்;
வாலைக் குமரியும் அம்பலச் சாமியும்
மாறித் தழுவினர், பீறிற்று வானின்பம் !
— கூத்தாடுவோமே !

# திக்குகள் எட்டும்

1

திக்குகள் எட்டும் சிதறித் திடுக்கிடக்
கெக்கலி கொட்டிடுவாள் ;
பொக்கென ஓர்கணத்தே அண்டம் யாவையும்
பொட்டென வெட்டிடுவாள் ;
கக்கும் குருதிக் கடலினில் ஊழியின்
காற்றில் குதித்திடுவாள்;
நக்க பிரானுக்கு நாயகி பாவம்
நடுங்க நகைத்திடுவாள்.

2

அண்டங்கள் யாவும் குலுங்கிடக் கிண்கிணி
ஆட்டங்கள் காட்டிடுவாள் ;
கொண்டல் நடுவில் குளிர்ந்த மதிவைத்த
கோலம் விளக்கிடுவாள் ;
கண்டு மகிழ்ந்தவர்க்கு இன்ப வெறியில்
கவிதை பொழிந்திடுவாள் ;
பெண்டு பிள்ளை குட்டி யாவரும் வாழ்ந்திடப்
பேரருள் செய்திடுவாள்.

3

சட்டச் சடசடக் கொட்டும் இடிக்குரல்
சத்தத்தில் வீற்றிருப்பாள் ;
வெட்டி யடித்திடும் மின்னல் வெறியினில்
மெட்டி மினுக்கிடுவாள் ;
துட்டர் பயப்படச் சிட்டர் களித்திடத்
தோத்திரம் பாடிடுவோம்;
பட்டின் மெதுவுப் பதத்தினில் வீழ்ந்து
பரவசம் எய்திடுவோம்.

# போதைக்கும் இன்பம்

துடி துடிக்குது! வானம் - அதில்
இடி யிடிக்குது மேகம்;
படி குதிக்குது, வெடி வெடிக்குது,
கடு கடுக்குரல் காற்றடிக்குது,
நடு நடுக்குது கூதல் - சுற்றிச்
சிடு சிடுக்குது காடு,
வெடு வெடுப்பொடு கிடு கிடுத்திட
மட மடக்கதிர் சட சடத்திடப்
புடை புடைக்குது பாறை - அதை
உடைத் துருளுது வெள்ளம்,
திடு திடுக்கிடக் கடல் குடையுது,
திசைக் களிறுகள் மசக்கை தட்டுது,
சடச் சடச் சடச் சட்டா - எனத்
தாளங் கொட்டுது மாரி,
சல சலக்குரல் கிலு கிலுப்பைகள்
உல குலுக்கிட, மலை குலுக்கியே,
வீசி வெட்டுது மின்னல் - அந்தத்
தேசிடைக் கருங் கன்னி,
விட்டு விட்டண்டக் கட்டுக் கழன்றிடப்
பொட்டெனக் களி நட்ட மிட்டனள்;
சுற்றிச் சுழலுது சூலம் - இருள்
பற்றி யெறிந்திடும் கோலம்,
சொக்கி மைக்கரும் அக்கினிச் சுடர்
மிக்கவள் பதம் புக்கு வாழுவோம்.
சூறை நின்றது காணாய் - இளம்
ஜோதி வந்தது பேணாய்!
சூதழிந்தது, வாதொழிந்தது,
மீதெழுந்தது போதைக்கும் இன்பம்!

# கறுப்புத் தெய்வம்

1

கறுப்புத் தெய்வமடா - தம்பீ,
காளித் தெய்வமடா!
விருப்புற்று நமக்கே அவள்தான்
வேண்டுவ தந்து வினையறுப்பாளடா!
- கறுப்புத் தெய்வமடா!

2

நெருப்புக் கக்கிடுவாள் - பவங்கள்
நீறு செய்திடுவாள் - அவள்
திருப்புகழ் படிப்போம் எங்கள்
சித்தமிசைப் புகழ் நித்தம் விளங்கிடக்
- கறுப்புத் தெய்வமடா!

3

தெற்குத் திசைக்காலன் - அவனைத்
தீவிழியால் எரிப்பாள்,
பற்கள் நறநற என்று கடித்தவள்
நொக்கி நெருக்கி நொறுக்கிடுவாளடா!
- கறுப்புத் தெய்வமடா!

# என் செய்வேன் ?

*1*

*உள்ளத்து உணர்ச்சியின் வெள்ளம் பொங்கும்,*
*அள்ளும் கற்பனை அமுதம் துள்ளும்,*
*காவியக் கனவுகள் கதிரொளி வீசும்,*
*எனினும்,*
*வார்த்தைக் கோப்பின் வளமை இல்லையே!*

*2*

*முத்து முத்தாக முத்தமிழ் வார்த்தைகள்*
*பத்தி பத்தியாய் வந்தன, பண்ணிசை*
*பாய்ந்தது, சந்தப் பண்புகள் பொங்கின,*
*எனினும்,*
*கற்பனை காணோம், கவிதையும் காணோம்!*

*3*

*உணர்ச்சியின் உச்சியில் வார்த்தை உடைபடும்,*
*வார்த்தைப் பொங்கலில் உணர்ச்சிகள் மங்கும்,*
*பண்ணும் சிறகுகள் பாய்ந்தெழும் தருணம்,*
*கண்குரு டானது என் கவிப் புள்; கற்பனைக்*
*கண்ணொளி வீசும் காலையில், சிறகுகள்*
*ஒடிந்தன, ஓய்ந்தன; உளையும் என் நெஞ்சம்;*
*என்செய்வேன் தேவீ! ஏழையேன் என்செய்வேன்!*

# போதக் கடல்

## 1

தேவி பராசக்தி அன்னைதான் - எந்தன்
சிந்தைக் கருக்கலில் மின்னுவாள் - அவள்
ஆவி பெரிதென எண்ணுகோ! - அவள்
யாக்கை பெரிதென எண்ணுகோ! - வானக்
காவியல் அண்டங்கள் யாவுமே - அவள்
காலடியின் சிறு தூசிகள் - வனப்
பூவியல் நவ்வி விழியினாள் - பதம்
போற்றிப் பணிவது நம் தொழில்.

## 2

ஆதியும் அந்தமும் அற்றதோர் - கடல்
அக்கரை இக்கரை இல்லையாம் - அதில்
ஜோதிச் சரிகைக் கரையிட்டே - அலை
துள்ளிய பேரொளி வீசுமாம் - சுற்றி
மோதி உடையும் பல் அண்டங்கள் - சில
மோகச் சுழலில் சுழன்றிடும் - நடு
வீதியில் சிற்சில பூக்குமாம் - அவள்
வீணையை மீட்டும் தொனியிலே.

## 3

ஆழக் கடலுக்கும் அப்புறம் - விரி
வாகிய வானத்துக் கப்புறம் - வெறும்
பாழைப் பயிர் செய்து கூத்திடும் - அந்தப்
பத்து வயதுச் சிறுமிதான் - எந்தன்
பீழைக் கரு மனக் காட்டிலே - வந்து
பித்தப் பெருநகை செய்தனள் - இன்பம்

சூழ வெறி கொண்டு துள்ளினேன் - ஞானம்
சொக்கி அமுதிடைத் தூங்கினேன்.

4

கண்கள் உறங்கிடக் கண்டதும் - இரு
காது மடிந்திடக் கேட்டதும் - நெஞ்சப்
புண்கள் ஒழிந்திடப் பூரணம் - அங்கு
பொங்கித் ததும்பிப் பரந்ததும் - நல்ல
தண்கள் மதுவினைப் போலவே - இன்பம்
தாவி விழுங்கித் தழைத்ததும் - கவிப்
பண்களுக் கென்றும் அகப்படாது - ஒளி
பாய்ந்து பரவசம் சூழ்ந்ததும்,

5

யாதெனச் சொல்லுவன் ஏழை நான்! - அந்த
ஆனந்தம் வார்த்தைக் ககப்படாது - இரு
காதற்றோன் கேட்பதோர் வர்ணனை - இரு
கண்ணற்றோன் தீட்டிய சித்திரம் - முட
வாதக்கோன் நாட்டிய வண்ணங்கள் - ஒரு
வாயற்றோன் பேசிய வார்த்தைகள் - போலப்
போதத்தைப் போதித்தல் என்று நான் - கண்டு
போதக் கடலினில் மூழ்கினேன்.

# ஆசைப்பட்டேன்

உதய வெள்ளத்து உச்சியில் நீந்தும்
வண்ண மேகமாய் வானில் பாயவும்,
வானம் பாடியாய்க் கானம் பாடவும்,
தளைகள் நீங்கித் தாவிப் பறக்கவும்,
மீனின விளக்காய் மினுக்கிச் சிரிக்கவும்,
திங்கள் என்னும் தெப்பத்து உலாவவும்,
வான் விற் பாலத்து வான் கடல் தாண்டவும்,
அப்பால், அப்பால்,
அண்டத்து அப்பால், அகண்டமாம் வெளியில்,
எங்கோ இருந்து எரியும் அண்டாண்ட
வரிசைகள் நின்னை வலம்வரல் காணவும்,
ஆசைப் பட்டேன்; ஆயினும் உடலச்
சுமை எனைப் பூமியின் துயரிடை வீழ்த்துமே.

# அகல்யா

## ஆரம்பம்

பூவாத பூங்கமலம், புரையாத மணிவிளக்கம்,
மோவாத முத்தாரம், முளையாத செங்கரும்பு,
காம்பின்றித் தன்னிலேதான் கவின் விரியும் கற்பகக்கா,
கூம்புமிருள் மொட்டினிலே குழையாத மின்னல் (வெள்ளம்,
குவியாத சந்திரிகை, குலையாத வானநிதி,
அவியாத மீனரசி, அலையாத அமுத கும்பம்,
புகை நீக்கிச் செந்தழலின் புரி நீக்கிச் செவ்வொளியை
நகையாக்க, அந்நகை ஓர் நறுமலராய்ப் பூத்ததெனப்
பங்கயத்து நான்முகனார் பங்கயத்துப் பொங்கெரியில்
தங்கம் தழைத்த மதுத் தழற் கனவாய்த் தோன்றி (னையே!
அன்னையிலாக் கன்னிகையே! யாருனக்கு யௌவனம் (எனும்
புன்னகையைத் தந்தாரோ, புதுவயிரப் பெட்டகமே?
நள்ளிரவில் கனவாகி நாளோடும் பூத்தவளே!
தெள்ளியதோர் தேன் வடிவே, தெய்விகமாம் (பேரழகே!
யாகக் கனற் கனவே, அருமறைக்கு நாயகியே,
போகத்துப் பூங்கனவே, போதத் தகலிகையே!
நின் அழகால் வானத்து நீலமெல்லாம் செம்மையுற,
புன்னகையால் மேகத்துப் புரியெல்லாம் சரிகையுற,

வெளிச்ச முகத் தழகால் விண் மதியம் வெறித்
(தொதுங்க,
தெளிச்சுவிட்ட முத்தமெல்லாம் சிறு மீனுய்க் கண்
(சிமிட்ட,
கண் இமைகள் காதற் கதவம் திறப்பிக்க,
பண்ணிசையும் செவ்வாய்ப் பனிமலரில் தேன் துளிக்க,
தோள் மிகுந்து துள்ள, துடை வளைந்து கூத்தாட,
தாள் குழைந்து கெஞ்ச, தளிர்க் கரங்கள் கொஞ்ச,
மேக மலர்க் காவனத்தே, வான வில்லின் வீதியிலே,
வேக மின்னல் போல் அலைந்து விளையாடுங் காலையிலே,
சிலம்பு குலுங்குவதும், சதங்கை சிலம்புவதும்,
அலம்புமணி மேகலைகள் அலம்புவதும் கேட்டானே?
கொட்டிக் குமுறும் இடிக் குரலன்றி வேறறியான்,
பட்டு மொழி நின் குதலைப் பண்ணிசையைக்
(கேட்டானே?
களக்கமுற்ற வெண் மதியைக் கண்கட்டி யாடுபவன்,
விளக்கமுற்ற பொன் மதி நின் மேனிக் கலைந்தானே?
வெள்ளைக் கடல் வந்த ஊர்வசியின் வேறறியான்,
தெள்ளுந் தழற்கடலின் தேவியுனை வேட்டானே?
மேகக் கருக்கலிட்ட மின்னற் கனவெல்லாம்
போகக் கனலுருவாய்ப் போந்த சுவை கண்டானே?
வள்ளத்து அமுதுண்டு வாழ்க்கை நிரம்பியவன்,
உள்ளத்து அமுதுண்பான் உன்னழகைக் கண்டானே?
மேக வலைக் கூந்தல் விரித்ததனைக் கோதுகையில்,
மோக வலைக்குட்பட்டு மூர்ச்சையுற்று நின்றானே?
கண்பாற் கடல் மிதக்கும் கரும்பாவைத் தோணிமிசைப்
பெண்பாக்கியக் கரையைப் பிடிக்க விழைந்தானே?
பவள இதழ் மூடியிட்ட பற்கதவுச் சாளரத்தின்
தவள நிலாப் புன்னகையில் தடுமாறி நின்றானே?

கன்னக் கதுப்புக் கனியூறும் செம்மலரைத்
தின்னத் தன் வாயூறித் திகைப்புற்று நின்ருனே?
மாந்துளிரின் செம்மேனி மாம்பூ மணியாரம்
மாம்பழங்களாய்க் கனிந்த மார்பகத்தை வேட்
(டானே?
நின்னெளியால் வானமெல்லாம் நிறையொளியாய்ப்
(பூக்கும் ஒரு
புன்னகையைத் தன் நெஞ்சப் புன்னகையாய்க்
(கொண்டானே?
மேகவாகனன் உன்னை மேகவா கனத்தேற்றிப்
போகவாகனனுகப் புதுமைபெறப் பார்த்தானே?
மின்னல் சரட்டினிலே மீன் முத்தம் கோத்து மதி
தன்னிற் பதக்கமிட்ட தனியாரம் தந்தானே?
நீர்க் குமிழ்ப் பரப்பென்ன நிலவெறிக்கும் பட்டினிலே
வார்க்கு மின்னற் கரைச் சேலை வனைந்து கொடுத்
(தானே?
அழியாத பேரழகே! ஆசை மதன் இந்திரனுர்
விழியிலுயிர் வைத்து நினை விரும்பியதைக்
(கண்டாயோ?
வெள்ளை நிலவின் வியப்பினிலே வானரசன்
துள்ளுங் கனவெல்லாம் தோகை நினைக் கூவலையோ?
உள்ளத் துடிப்பெல்லாம் ஒவ்வொன்ருய்ப் பாய்ந்
(துனது
உள்ளத்தை ஈர்த்தேகும் உன்மத்தம் கண்டிலையோ?
மேகத்து மெல்லணையில், மின்னற் கொடி வீட்டில்,
மோகமே, நின்னையுற்று மோகனங்கள் பாடினனே?
கைகுவித்து நாணத்தால் கண்மறைத்தா யென்ருலும்,
கைவிரலின் ஊடவன்பால் கண்பார்வை சென்ற
(துண்டோ?
முகங் கவித்தா யென்ருலும், முன்னுகின்ற நெற்றியினில்
அகங் காட்டும் கண்ணுடி ஆசையொளி வீசியதோ?

கிஞ்சுகத்தைக் கூவுவ போல் கிஞ்சுக வாய்த் தேன்
(மலர்ந்து
அஞ்சுகமே, நீ திரும்பி அவனழகைப் பார்த்த
(துண்டோ?
ஆடை விசிறி அதை முள்ளில் சிக்கவைத்துப்
பீடை விலக்குவ போல் பிரியமுறப் பார்த்த
(துண்டோ?
நாளையென நாளையென நளின விழிப் பேச்சாலே
ஆளை மயக்கியே நீ அமுதூற்றிச் சென்றதுண்டோ?

ii

## திருமணம்

பந்தயத்தால் அண்டாண்டப் பரப்பை யெல்லாம்
(சுற்றி முதல்
வந்தவர்க்கே நின்னை மணப்பதாய் நின் தந்தை
ஆணையிட்ட வாக்குக் கடங்கி யந்த வானரசன்
சாணையிட்ட மேகத்தேர் சஞ்சாரம் செய்தானே.
வான்வில் சிறகணைத்து, வட்ட மதித் தட்டமைத்து,
வால்மீன் பரிகள்கட்டி, வளையவரப் போனானே.
மண் கழிய, விண் கழிய, மற்றுள எலாம் கழிய,
கண் கழிய, மின்வேகக் கடுமையினிற் பாய்ந்தானே.
கொட்டுமிடிப் பேரி கொட்டி, கோல மின்னல் வாள்
(சுழற்றி,
கிட்டிவரும் மாமலைகள் வெட்டி முன்னாற் பாய்ந்தானே.
இக்கோடிக் கோடி உலகக் கோடிக் கோடியெனத்
திக்கோடித் தூள் பறக்கத் திசை மாறிப் பாய்ந்தானே.
அக்கரையும் இக்கரையும் அங்குமிங்கும் ஒன்றாக
எக்கரையும் பின் கழிய ஏறி முன்னாற் பாய்ந்தானே.
கண்ணிமைப்பின் முன் கோடிக் காத வழி கடந்தான்,
எண்ணிமைப்பின் முன் அண்டத்து ஏழடுக்கும்
(தாண்டுகின்றான்;
முன்னோடும் தன்னெஞ்சம் முடுகி அதைப்பிடிக்கப்
பின்னோடுந் தேருருட்டிப் பித்தேறிப் பாய்கின்றான்.
இந்திரனார் இவ்வாறாய் எங்கெங்கும் சுற்றிவர,
மந்திரமா ஞானத்தால் மாநிலத்தே ஓர் முனிவன்,

நின்னழகைக் கேட்டு நினை விரும்பும் கோதமனுர்,
மன்னும் பசுவை வலம் வந்து நினை வேட்டானே.
ஆவினுக்குள் அண்டாண்டத் தகிலாண்டம் யாவை
(யுமே
மேவிநிற்கும் என்ன முனி வேதம் படித்தானே.
இவ்வண்ணம் பந்தயத்தை ஏமாற்றி வந்தவற்கு
மெய்வண்ண நின் தந்தை மின் உன்னைத் தந்தானே.
தேவாதி தேவர் இந்தத் தீமை தடுக்கலையோ?
மூவாத மூவர்களும் மூர்ச்சையுற்றுப் போனுரோ?
மொக்கு விரிந்த மலர் மோகனமே! நின் கனவு
சுக்கு நூறுகத் துளைபட்டுப் போனதுவோ?
வஞ்சனையாம் இம்முடிவின் வஞ்சனைக்குப் பேச்சின்றி,
அஞ்சுகமே! நீயேன் அகப்பட்டுக் கொண்டாயே?
தாடி முனி உன்கைத் தளிரைப் பிடித்தவுடன்
நாடும் உயிரெல்லாம் நடுங்கித் துடித்ததுவோ?
திக் கடவுள் சாட்சியெனத் தெய்வ மறை செப்புங்கால்
திக் கடவுள் நாவடங்கித் தேய்ந்தணைந்து போக
(லையோ?
தாரை வார்க்கும் தண்ணீர்த் தாரை நின் கண்ணீரின்
தாரை யுடன்கூடித் தகைமாறிப் போயிற்ருே?
ஒவ்வோர் மந்திரமும் ஒவ்வோர் விலங்காய் நின்
செவ்விதனைச் சிறைவைக்கும் தீர்ப்பாகத் தீர்ந்த
(துவோ?
கழுத்தினிலே தாலிக் கயிறேறச் சுருக்கிட்டுச்
சுழுத்தியிலே தூக்குமரத் தூக்கம் போல் தோன்றி
(யதோ?
தோரணத்தின் மாவிலைகள் சூழும் விதி விரல் போல்
காரணமே நின்னைக் கலக்கங்கள் காட்டினவோ?

தொட்ட தொட்ட இடமெல்லாம் சுவையூறும் நின்
(மேனிக்
கட்டவிழ்ந்து வேகக் கனலாய்க் கொளுத்திற்றே?
இல்லையேல், இந்திரனார் காதல் இசைகளெல்லாம்
சொல்லளவாய் நின் மனத்தே தோய்ந்து மறைந்
(தனவோ?
இந்திரனும் வந்தான், ஏமாந்தான், நொந்தான் ;
அந்தரத்தே பம்பரம்போல் ஆடி அயர்ந்துவிட்டான்;
கண்ணெல்லாம் நின் கண்ணாய், கருத்தெல்லாம் நின்
(கனவாய்,
பெண்ணெல்லாம் நீயாகப் பித்தேறிச் சாய்ந்தானே!

## iii

## கற்புக் கனல்

*காலைக் கதிர் போலும் கனக மனை வாழ்ந்தாய் நீ,*
*ஓலைக் குடிசையினில் உயிரொடுங்கிப் போனாயோ?*
*கட்டற்ற வானக் காவினிலே பாய்ந்தாய் நீ,*
*குட்டிச் சிறு குடிலின் குறுக்கிற் குமைந்தாயோ?*
*கற்பகக்கா நீழலிலே கண்வளர்ந்த பேரின்பம்,*
*சொர்ப்பனமாய்ப் பச்சை மரச் சோலையிலே மாய்ந்த (துவோ?*
*மேக மலர் மலர்ந்த மின்னற் கொடி மனையின்*
*மோகமெல்லாம் பைங்கொடியின் முழையிருட்டில் (மாய்ந்ததுவோ?*
*வெள்ளை நிலாப் பொழிலில் விளையாடும் பொன் மேனி,*
*கள்ளக் கரும் பொழிலில் கண்மயங்கிப் போனதுவோ?*
*வால்மீன் பரியேறி வளையவந்த வேகமெல்லாம்*
*கால் தோய்ந்து தள்ளாடும் கடின நடை ஆனதுவோ?*
*கற்பகத்தின் பூப்பறித்துக் கனிந்த மலர்த்தேன் (விரல்கள்,*
*தர்ப்பைகளின் வேரறுத்துத் தடுமாறிப் போயின (வோ?*
*மின்னற் கோல் ஒடித்து விளையாடும் கோலாட்டம்,*
*சின்னச் சமித்தொடிக்கும் சிறுமையினில் தேய்ந்தது (வோ?*
*எல்லோரும் பணிசெய்ய ஏமாப்புறுஞ் செல்வம்,*

எல்லோர்க்கும் பணிசெய்யும் எளிமையினில் தேய்ந்த
(துவோ?
என்ருலும் நின்முகத்தில் ஏமாற்றம் காணேமே!
நின்ருடும் ஓரமைதி நிலையாகப் போயிற்றே!
சாந்தம், எளிமை, தவம் ஞானம், தனிமை யெல்லாம்
போந்து விளையாடும் புதுமை யொன்று பூத்ததுவே.
தவத் திளைத்து ஹோமத் தழல் படிந்த செம்மேனி
சிவத் தணைத்துப் பொங்கும் சிறப்பாகத் தோற்றியதே.
ஆரவாரக் கடல்போல் ஆசையலை வீசிய நீ
ஆரவாரித் தடங்கும் அமுதென்ன நின்ருயே.
கள்ளைப் போல் நுரைகக்கும் காமக் கனற் பாவாய்!
கள்ளைக் கடைந்த வெண்ணெய்க் காதல் கனிந்தாயே.
வெற்றிப் பறையிடித்து, மின்சுழற்றிப் பெய் மாரி
அற்றவுடன் தோன்றும் அழகு மதி போன்ருயே.
ஊழித் தியெல்லாம் ஒரு சுடராய்ப் பூத்து! மனை
வாழும் மணிவிளக்க மங்கலமாய் நின்ருயே.
கற்பனையில் காதற் கனுக்கண்டாய் அன்று; இன்றக்
கற்பனையே கற்பென்னும் நனவாய்க் கனிந்தாயே.
பொற்பு மிகுந்து அமைதிப் புதுமை புனைந்ததுவாய்க்
கற்புக் கனற்புடத்தில் கவினூறிப் பாய்ந்ததுவே.
வானரசன் கண்டான், மனத்தே வெறி கொண்டான்;
தானமுதம் உண்பான் தனையமுதம் வேட்கின்ருன்.
நீராடப் போம்பொழுது நினைக் கண்டான், தன்
(மனத்தே
போராடி நின்னைப் புனைவதெனத் தீர்த்துவிட்டான்.
அன்று கொண்ட காதலின் தீ அணையவில்லை; மென்
(மேலும்
பொன்ருப் பெருஞ் சுடராய்ப் புது வெறியாய்ப்
(பொங்கிற்றே.

பண்டைக் கனுப் பறவை பரவசமாம் சிறகுற்று
மண்டை கிறுக்கிவரும் மாருதத்திற் பாய்ந்ததுவே.
மத்துருட்டும் தயிரென்ன மனதுருட்டும் காமத் தீ
பித்துருட்டும் பேயாட்டப் பெருஞ்சூறை யானதுவே.
தானுண்ணுங் காதல்தனையுண்ண, வானரசன்
தேனுண்ணும் ஈப்போலத் தியங்கித் திகைத்தானே.
போதக் கனற்சுடராம் புதுமைக் கவிமலர் நின்
காதல் விளக்கணையும் காம விட்டில் போல் வந்தான்.
காத்திருந்தான் காதலியை நேற்றுவந்தான் கொண்டு
(செலப்
பார்த்திருந்தார் எல்லோரும் பழிதீர்க்க வந்தானே.
“கண்ணே, மணியே, கவிதைக் கடலமுதே,
விண்ணே, அவ் விண்காணு வியப்பே!” எனவிரைந்
(தான்.
“ஆவியே, ஆவிக்குள் ஆவிக் கனற் கனவே!
பாவியேன் நெஞ்சத்துப் பழிதீர்க்க வல்லாயோ?
கண்மூடில் நின் கனவு, கண் விழித்தால் நின் நினைவு!
மண்மூடும், விண்மூடும், மதிமூட மாட்டாதே!
நீயிங்கு வந்ததனல் நிறைவானம் வெறிச்சென்னப்
போய் மங்கி அறுவடைப்பின் பொட்டை வயல்
(போன்றதுவே.
விண் நீலக் கடல்மேகத் தீவெல்லாம் வெளிறிப் போய்த்
தண்ணீர் காணுப் பாலைத் தழற் கானல் காட்டியதே.
நீ வளர்த்த கற்பகக் கா நினைவளர்த்த பேரின்பம்
மேவுதற்கு முடியாமல் வியப்படங்கிப் போனதுவே.
ஆகாச கங்கை அருஞ்சுனைகள் எல்லாம் நின்
தேகந் தழுவாமல் தேங்கித் தியங்கினவே.
வானப் பசு, மான், மீன் மற்றுள எலாம் உனது

கானக் கருணையின்றிக் கண்மயங்கிப் போயினவே.
மேகமலர்க் காவனமும் மின்னற் கொடி மனையும்
சோகமுற்றுக் கண்ணீரால் துளையுற்றுச் சோம்
[பினவே.

எப்பொருளும் இவ்வாருய் எழில்தீர என்உயிரைக்
கப்பு துயர் ஒவ்வொவ் வோர் கணங் கணமும்
[மேலோங்கும்.

துயரெல்லை காணவெனில் தொடுவான் போல்
[ஏமாற்றித்
துயர்காட்டும் அல்லாது சுகங்காட்ட மாட்டாதே.
கணங் கணமும் நீளும், கருத்துண்டு மேற்பொங்கும்,
கணம் துன்பக்.கேணி, மறு கணம் கடலாய்த் தான்
[விரியும்.

உள்ளும் ஓர் கணத்துள்ளே ஓராயிரம் தடவை
மெள்ளப் பிறப்பேன், இறப்பேன், விழிப்பேனே!
அன்று முதல் இன்றளவும் யானில்லை; யான் நீயாய்த்
தின்றென்னைத் தீர்த்தாய்! திகைப்படக்க மாட்டா
[யோ?

காதல் விதை விதைத்தோம், கனி பறிக்க வேண்
[டாவோ?

ஏது நடு நேர்ந்தாலென்? இதயக் கலைவாமோ?
உள்ளமிரண்டு ஒன்ருனல் உடலிரண்டு ஒன்றலவோ?
கள்ள முனி வஞ்சனைக்காய்க் கற்பு விற்கப் போமோ
[தான்?

மற்ருெருவன் தாரம் நீ, ஆனாலும் வானரம் கைப்
பற்று மலர் மாலை பறித்தணைத்தால் பாவமுண்டோ?
சட்ட வஞ்சம் தான்நிலைக்கத்• தன்மை வஞ்சம் செய்வ
[துண்டோ?

இட்ட வஞ்சம் உற்றதனுல் இனிமை வஞ்சம் ஆமோ
[தான்?
போன வஞ்சம் போகட்டும், புதுமை வஞ்சம்
ஆகாதே!
தீனன் எனைக் காப்பாயோ? தேவியுனை வேண்டு
[கின்றேன்.
புதுமை யில்லை - பழங்காதல் புதுப்பிக்க வந்தடைந்
[தேன்.
இது தவருே? இனிமை வெள்ளத்து இடைகட்டல்
[ஆகாதே.
அன்புக்கு இணையும் உண்டோ? ஆன்மத்துக்கு எல்லை
[யுண்டோ?
இன்புக்கோ துன்புக்கோ ஏதேனும் செய்யாயே.
காதல் காண்பான் வல்லே; காமம் தீர்வான் வல்ல;
மீதெழும்பும் மோக வெறி விலக்குவான் வல்லே -
மயிர்க் குச்செறி மதன மகராணீ! நின் சமுகத்து
உயிர்ப் பிச்சை வேண்டி வந்தேன், உதவாய்!" என
[வீழ்ந்தான்.
இவ்வளவோ! பற்பலவாய் ஏதேதோ செப்பி
[நின்ருன்.
அவ்வளவும் கேட்டாள், அமைதி குலைந்தாளே!
உற்று விழித்தாளே, ஊழிக் கால் போன்ருளே,
நெற்றி வியர்த்தாளே, நெருப்பென்ன நின்ருளே,
மார்பு துடிக்க, மனந் துடிக்க, வாய் துடிக்க,
பார்வை துடிக்கப் படபடத்துப் பொங்குகின்ருள்:
"யாரை நீ சொன்னுய்? அடகெடுவாய்! மதியில்
[லாய்!
வேரை அறியாதே வெற்றிலையை வேட்கின்ருய்!
கற்புக் கனல் நான்; காமச் சிறு புழு நீ!

அற்பம் நீ என்பால் அன்புரைக்க வந்தாயோ?
எங்கணவன், என் முனிவன், என் தலைவன், எனும்
[பேச்சில்
பொங்கி வளருங் கற்புப் போதம் அறிவாயோடா?
இந்திரனும், சந்திரனும், எவனுனல் எனக்கென்ன?
மந்திரமா முனி யெந்தன் மணவாளன் கண்டாயே!
மட்கலயத்து அமுதன்னன் மாமுனிவன்; காம மலப்
பொற்கலயம் போல்வாய் நீ; போதம் பழிப்பாயோ?
அறிவறியாப் பருவத்தில் ஆசைகொண்ட பேதை
[மைக்காய்
அற்றி அறிந்த பின்னும் நான் அறங் கொல்ல வேண்டு
[வதோ?
காதல் விதையாம் - கனிபறிக்க வந்தானும் -
மாதென்னை வேசையென மதித்தாயோ, மதியில்லாய்?
யாரிடத்து இக் கதையெல்லாம் அவிழ்க்கின்றுய்?
[வேசையராம்
ஊர்வசிக்கும் மேனகைக்கும் உரைப்பாய்!" என
[வெகுண்டாள்.
"வஞ்சனையாம் வஞ்சனைக்கு வஞ்சமிட வந்தானும்!
நெஞ்சிரக்கம் இல்லாது என் நேர்மை திருடவந்தாய்.
மெய்ப்பாட்டியல் முனிவன் வேத மனையாட்டி யென்னை
வைப்பாட்டி யாக்கொண்டு வசைகாண வந்தாயோ?
உயிர்ப்பிச்சை வேண்டுமோ? உயிர்க்குயிராம் என்
[கற்புக்கு
உயிர்ப்பிச்சை யார் தருவர், உளுத்த மரம் போன்ற
[வனே?
விண்ணுக்கு அரசன் நீ, வெட்கமிலை? காமத்துப்
புண்ணுக்கு அரசாய்ப் பொறியிழந்து போனுயே!

தேவர்க்குத் தேவன் நீ! தீமைக் கரசன் நீ!
பாவக் கடு விஷத்துப் பாம்பானாய், பாதகனே!"
என்னப் பலப்பலவாய் இடியிடித்துச் சென்றுவிட்
[டாள்.
தன்னை அறிந்தான், தலைகவிழ்ந்தான் வானரசன்.
திகைப்பூண்டு மிதித்தான் போல், தீக்கங்கு தின்றான்
[போல்,
புகைக்கூண்டு விளக்கென்னப் பொலிவிழந்து
[நின்றானே.
அறிவு பல்கால் அணைபோட, ஆசை பல்கால் உடைத்
[தோட,
வெறியவனாய்ச் செயலறியா வீணன்போல் ஆனானே.
நெடு நேரம் போராடி நெஞ்சத்து உறுதியுற்றான்:
"தொடு வான் போல் ஆனாலும் தொடுவேன்
[அவளை!" என்றான்.

## சூட்சி

ஆசை மிகுந்தான் அறிவிழந்தான் காமத்தே;
நேசம் நிறைந்தான், நெறிகுறைந்தான் வானரசன்.
தலைக்கு மேல் வெள்ளம் என்றால் சாண் முழம் கோல்
[பார்ப்பாரோ?
நிலைக்கு மேல் காமம் என்றால் நேர்மையதில் காண்ப
[துண்டோ?
ஆத்திரத்தின் போக்கினிலே சாத்திரத்தை விட்டுவிட்
[டான் ;
தீத்திறத்துச் சூறையிலே சிறு துரும்பு போன்றானே.
மூவுலகும் தன்னதன்றோ? முடியாத தொன்றுண்
[டோ?
பாவ மென்று பார்ப்பானோ? பயன் மிகுந்தால் பேச்
[சுண்டோ?
'கற்பாம், கணவனும், கதையெல்லாம் கதைத்தாளே!
பொற்பே தருமம் காண்! புதுமையே பேரின்பம்!'
மாட்சியினால் கற்பென்னும் மாதவத்துத்தேவதையை,
சூட்சியினாலே பெற்றுச் சுவைப்பத் துணிந்துவிட்
[டான்.
வாதாடிப் பெற்றணைய வகையில்லையே! இனிமேல்
சூதாடிப் பெறுவதெனச் சூளுரைத்து விட்டானே.
'மந்திரத்தால் மாங்கனிதான் வீழ்வதுண்டோ? மாத
[வளைத்
தந்திரத்தால் ஏமாற்றித் தழுவுவேன்!' என்றானே.
''என்னைப் பழித்தாளே - யானவளைக் கற்பழித்துத்

தன்னைப் பழிப்பாக்கத் தவறேன்!' என் றுணையிட்
[டான்.
'அற்பனென்றுள் ; இவ்வற்பன் அவளுடைய பேரழ
கற்பைக் கலக்கிக் காட்டுவான்!' என்றுனே. [குக்
'பிச்சைச் சிறு முனிவன் பேயன் பொருட்டு எந்தன்
இச்சை குலைத்தாள் இவள் குலையப் பார்ப்பேனே!'
என்னப் பலப்பலவாய் எண்ணமிட்ட வானரசன்
பின்னே நடத்து செயல் பேரவதி பேசிடவோ?
அன்றொரு நாள் ராத்திரியில் யாமம் இரண் டொன்றுக
ஒன்றி இருளோ டிருளாய் உலவுகின்றுன் வஞ்சமகன்.
நெஞ்சக் கருமையவன் நீள்விழியிலே சுளிக்க
வஞ்சக் கருமையவன் மேனி வளப்பமிட, [ஒடுங்க,
கங்குலுக்குக் கருமை தரும் கருமை கண்டங்கு அறம்
திங்கள் கவர வரும் தீப்பாம்பு போல் வந்தான்.
பெண்ணுக் கரசு அகல்யைப் பேரழகைக் கண்ணி
[வைக்க
விண்ணுக் கரசன் ஒரு வேடன் போல் வந்தானே.
குக்கல் குரைப்படங்க, கூகைக் குரலொடுங்க,
கொக்கரக்கோ கோழியெனக் கூவினுன் கோள் மிகுந்
[தான்.
அக்குரலைக் கேட்ட முனி அக்கணமே சந்தி செய
மிக்கவிரைவா யெழுந்து வெளியில் புறப்பட்டான்.
பொய்யில்லாக் கோதமனும் புறத்தேகப் பார்த்திந்தப்
பொய்யன் அவன் வடிவில் புகுந்தான் குடிசையுள்ளே.
ஓரத்தோர் நாணற்பாய் மீதே உறங்குகிருள்
மூரல் கலையாத மோகக் கவிதை மகள்.
ஒற்றை அகல் விளக்கத் தொளி இருளைக் காண்பிக்க,
கற்றை இருள் நடுவோர் கதிர் போலக் கண்வளர்ந்
[தாள்;

கூந்தல் புரள, கோல முன்கைத் தண்டின் மேல்
ஏந்து தாமரை முகத்தில் இனிமைக் கனவூர,
பெண்ணழகுத் தெய்வம் பேரமைதி யோடுறங்கும்;
பண்ணசைந்து நீள்மூச்சுப் பாய்ந்து கொங்கை
[தாலாட்டும்.
ஆசை அவசரத்தில் அஞ்சுங் கணத்துள்ளே
மோசச் சுளிப்பினிலே முன்னேறும் வானரசன்
ஆங்கவளைக் கண்டான், அழகுண்டான், கொண்
[டான் -
திங்கு தடுப் பாரில்லை, தீமை புரிந்துவிட்டான்.
'என்றுமில்லாப் பேர்ராசை என் கணவர் கொண்
[டாரே!
இன்று கண்டேன் பேரின்பம் யான்!' என்று இணங்கி
[விட்டாள்.
இவ்வாறு இருவோரும் இணைந்திருக்கும் போதினிலே
பொய்யான போது கண்ட போத முனி போந்தானே.
வந்தான் முனி, முனிவான் வாரா முன், வானரசன்
பொந்தூடோர் பூனை யெனப் புறத்தே புகுந்தானே.
அக்கணத்தே கண்டாள், அறிந்தாள், அவலமுற்றாள்;
அக்கணத்தே மாமுனியும் அறிவறிந்தான் சேதியெல்
[லாம்.
கோபக் கனல் குமுற, கொதித்துள்ளம் கொப்பளிக்க,
சாபத் தழல் நாவில் சண்டமாருதம் கக்க,
'தீங்குசெய்த தேவமகன் தீமையுடற் செம்மேனி
தீங்குபெறு பெண்குறி ஆயிரமாகத் தீமையுற!'
என்றான்: எனச் சாபம் ஈடேறத் தேவமகன்
குன்றாத தோள் குன்றக் குவிந்தான் இருளூடே.
வானரசன் போனான்; மனையரசு நாணிப்போய்க்
கூனிக் குறுகிக் குமைவாளைக் கண்ட முனி,

'இல்லாம் பெருந் தருமம் இழித்த மகள் இக்கணமே
கல்லாக் கிடக்க!' எனக் கடுஞ்சாப மிட்டானே.
இச்சாபம் வந்தணைய ஏந்திழைதன் கைகுவித்து,
"இச்சாபத் துக்கு இறுதி ஏதேனும் காட்டு" என்றாள்.
"பின்னாள் இராமனெனும் பெருமாள் பதத் தூளி
உன்மேல் உறும்போது" என்று உரைத்தான்:
[கல்லாய் வீழ்ந்தாள் ;
அப்புறமாய்த் தேவர் வந்தங்கு அமரர்கோன் பொன்
[மேனிக்
கொப்புளங்கள் மாற்றக் குறையிரந்து நின்றதுவும்,
பெண்குறியாம் புண்மேனி கண்குறி ஆயிரமாக
மண்முனிவன் சாபத்தை மாற்றி யமைத்ததுவும்,
யாருக்கு இவை வேண்டும்? அன்புக்கு நாயகியை,
சீருக்குத் தெய்வத்தைச் சிதைத்துவிட்டார்,
[ஐயையோ!
அறம் நின்றாள் வீழ்ந்தாள்; அறம் கொன்றார் வாழ்
[கின்றார்!
திறங்கொண்ட செம்மாப்பால் தீமை புரிந்துவிட்
[டார்!
காதலன்தான் கற்பழித்தான் ; கணவன் அவள் பொற்
[பழித்தான்!
மாதரசை வேசையென மாநிலத்தார் ஏசலுற்றார்.

V

## மீட்சி

இவ்வண்ணம் பல்லாண்டாய் இழிவண்ணமாக் கிடந்
[தாள்.
மைவண்ணம் தீர்ப்பதற்கோர் மழைவண்ணமாய்
[வந்தான் -
காரென்ன மேனி, கதிரென்னப் புன்முறுவல்
வேரென்னத் தருமம், விளைவென்னக் கருமங்கள்,
வானென்ன மேனி, மதியென்னப் பேரழகு,
தேன்மலரின் செவ்விளமைச் சிறு குமரன், தெய்வக்
[கோன்,
கடலென்னக் கருமேனிக் கரையென்னச் செவ்விய
[தாள்
விடமன்ன பவ நீக்கும் விரி யமுதக் கமல மலர் –
மையென்னக் கரு வடிவில் மழையென்னக் கருணைவரி
பொய்யென்னக் காணுத புதுமையுறும் புனித மகன்.
நீலமணித் தோற்றத்தான், நெருப்பன்ன சீற்றத்தான்,
காலவெள்ளம் ஈடேறக் கதிகாட்டும் ஏற்றத்தான் -
நாவற் பழம் பழுத்த நற் சுடரின் பொன்மேனி,
தேவக் கனி பழுத்துத் தெய்வமெலாம் புகழ் தெய்வம்,
நீலத் தாமரை முகத்தில் நீள் செந்தாமரைக் கண்கள்,
சீலத் தாமரைக் கைகள் சிவக்குந் தாமரைப் பாதம்,
கொண்டு ஆயிரம் பரிதி குடித்துவரும் கொண்டல்
[எனக்
கண்டார் உயிர் மயங்கக் கவினூறும் காதல் மகன் -
கோசலை மன் குலவிளக்கம், குவலயத்துக் கறவிளக்கம்,
வீசும் சுடர் நெறியில் தெய்வமெலாம் வென்ற மகன்,

மறங்கொல்வான், அறங்காப்பான், மானுடத்தின்
[உச்சிச் சீர்த்
திறங் கண்டார் பவந் தீர்க்கும் தேசுடையான்
[ஸ்ரீராமன் -
தாடகையை ஓர்நொடிக்குள் தனு ஒன்றால் சம்ஹ
[ரித்துப்
பீடை விலக்கிவரும் பெருமான், தன் தம்பியொடும்,
மண் படைத்த விசுவ முனி தன்னோடும் மதில் மிதிலைப்
பொன் படைத்த மின் நகரப் புரிசைக்குப் போம்
[வழியில்,
கண்டான் ஓர் புல்வெளியில் கருங் கல்லாய்க் கிடப்
[பாளை.
கண்ட கல்மேல் காகுத்தன் கழல் தூசி கதுவா முன்,
பளிச்சென்ன ஓர் கணத்தில் பண்டை வண்ணமாய்
[நின்றாள்.
வெளிச்சமுற்ற பேரழகால் வியப்புற்றான் தேசுடை
[யான்.
வியப்பானை நோக்கி அந்த விசுவ முனி விளக்கிடுவான்,
நயப்பான வார்த்தைகளால் நடந்த கதை சொன்
[னனே.
கேட்டான் இளங் குமரன், கீழ்வீழ்ந்தான் அன்னை
[யென,
தாட்டாமரை* வணங்கித் தவமகளைத் தேற்றிடுவான்:
"நீ பிழைத்தாய் அல்லை: நினைப் பிழைத்தார் எல்லோ
[ரும்;
ஆயிழை நீ தருமத்துக்கு அறிகுறியாய் நின்றாயே!
ஆதலினால் துன்பமுறேல் அன்னாய்!" என்று ஆதரித்
கோதமன்பால் அறமகளைக் கொண்டு [துக்
[சென்றான் ராகவனே.

---

* தாட்டாமரை - தாள் தாமரை - தாமரை போன்ற பாதங்களை.

## முடிவு

வரவேற்ருன் ராகவனே, மற்றவனே, மாமுனியை,
தரைமேல் தான் தனி வீழ்வாள் தவமகளேக் கண்
[டிலனே.
கண்டும் காணு நிற்கும் கோதமனின் கழல் பேணி
அண்டி அண்டி வீழ்ந்தயர்வாள்; அறமகளின் துயர்க்
[கோலம்
கண்டுவிட்டான் ராமன்; கனன்ருன் மனத்துள்ளே.
பெண் தானும் மற்ருேரைப் பேச்சற்ருள் பார்க்கின்
கோதமனே நோக்கி, குலமகளே நோக்கி, அவள் [ருள்.
வேதனேயை நோக்கி, விம்மும் வீரன் முகம் நோக்கி,
மண் படைத்த விசுவ முனி, "மதி படைத்த கோத
[மனே!
பெண்பிழைத்த தில்லே, அவள் பிறன் பிழைக்கப்
[பிழையுற்ருள்.
மனேக் குற்றம் என்ருலும் மனக் குற்றம் இல்லாளே,
உனக்குற்ற மனேயாளே ஒதுக்குவதால் பழிபோமோ?
சாபமிட்டாய்; சாபத்தால் தன் குற்றம் தீர்த்தாளேக்
கோபமுற்றுப் பின்னருந்தான் கொடுமை செய்தால்
[குறையன்ருே?
குற்றமது குற்றந்தான், குற்றம் குறைக்கவில்லே;
குற்றமுற்ருன் வானரசன், குறையுற்ருள் நின் மனேவி,
உடற்குற்றம் என்றதனுல் உயிர்க் குற்றம் ஆமோ
[தான்?

கிடக்கட்டும், ஏற்றுக்கொள் கிளிமொழியை!" என்
[ருனே.
என்பானை நோக்கி முனி, "என்றே என் மனையாளாய்
அன்பான நல்லறத்தை அழித்தாளை யான் அழை
[யேன் ;
சொற் சாபம் தீர்த்ததனுல் தூய்மையுற்ருள் என்ரு
[லும்
இற்சாபம் தீர்ந்ததிலை, இசை வசையாய்ப் போயி
[ற்றே!
தன் பிழையைச் சாபத்தால் தான் தீர்த்தாள் ; அவ்
[வளவே -
என் பழியை, என் குலத்தின் இசைப் பழியைத் தீர்ப்
[பாளோ?
அலக்கணுற்று இங்கு அழுவாளை யான் இரங்கிப்
[பெற்ருலும்,
குலக்கொடியாய் அன்னவளைக் குவலயத்தார் ஏற்
[பாரோ ?
பாத்திரத்தின் அழுக்காலே பால் அழுக்காம் ; பொய்
[உடலின்
மாத்திரந்தான் குற்றமெனில், மதி குற்றம் ஆகாதோ?
அத்தன்மை அவள் பாவம் அல்ல, பவத்து ஏமாந்
[தாள்
எத்தன்மை என்ருலென்? இழிதன்மை போகாதோ!
தீத்தன்மை தெரியாதே சிறு மதலை தீண்டுவதால்
தீத்தன்மை வேருமோ? சிறு மதலைக்கு உய்
[வுண்டோ?
நெஞ்சறியாக் குற்றமெனில் நிலையழியாதோ? இந்த
வஞ்ச மகள் வாலிபத்தில் வானரசைக் காதலித்தாள் ;
அப்போதைக் காதலன்றே இப்போது இப்பிழையாக

எப்போதும் இழிந்தவளாய் எளிமையுறச் செய்த
[துவே!
ஆதலினுல் அகலிகையை யான் ஏற்கேன்!" என்ன
முனிக் கோதமனும் முடிவான வார்த்தையெனக்
[கூறிவிட்டான்.
அச்சொற் கேட்டான் ராமன், "யாரை நீ சொன்னுய்?
[இப்
பிச்சைச் சிறு தருமம் பெரியோய் நீ பேசுவதோ?
கொடுமைக்கு ஆட்பட்டவளைக் கொடுமை செய்து
[பார்த்தாயே!
கடு தீக்குள் படு மகவைக் கனல் உண்ணக் காண்பா
நீயாகவே நினைத்து நினக்காப் பழியுற்ருள்; [யோ?
பேயான நீ அவள்தன் பெருமை குலைத்தாயே!
சித்த வஞ்சம் அல்லாதாள் தேக வஞ்சம் ஆனதற்காப்
பித்த நெஞ்ச முற்ருய் நீ, பெரிய வஞ்சம் செய்தாயே!
அப்போதே வானரசைக் காதலித்தாளாம்! அறிந்
[தும்,
மெய்ப்போத முனிவன் நீ வேட்டாயோ, வேண்டா
[தாய்?
வானரசன் காதலியாம், வகைமோசம் செய்தாளாம்,
மானம் அழிந்திலையோ மணங்கொண்ட போதினிலே?
விளையாட்டுப் பருவத்தில் விளையாட்டுத் தோழன்
[அவன்:
களை காட்டி அதில் குற்றம் கற்பிப்பாய், கருத்தில்
[லாய்!
பொய்யன் நீ! வஞ்சன் நீ! போலி அறப்
போதன் நீ!
மெய்யான திருமகளை வீணுகப் பழிசெய்தாய்;

பாத்திரத்தின் அழுக்காலே பால் அழுக்காம், யானறி
[வேன் :
பேய்த் திறத்து நின்ருலே பிழையுற்ருள் பெண்
[பாவை.
சந்தனத்தைச் சேற்றுச் சதுகரிலே ஊற்றுவ போல்
உந்தனுக்கு இத் திருமகளை உரிமை செய்தார் பிழை
[செய்தார்!
நெஞ்சிரக்கம் இல்லாதாய்! நெறி அறியாய்! பெண்
[ணரசை
வஞ்சனையால் கொன்ருய் நீ ! மறுபடியும் பேசுகின்
[ருய்!
எத்தன்மை யாஞலும் இழிதன்மை போகாதாம் -
இத்தன்மைத் தருமத்தை இன்றே நான் கேட்கின்
[றேன்!
தான் ஏமாந்தாள் குற்றந்தானே என்பாயேல், நீ
தான் கோழிக் குரல் கேட்டு ஏமாந்தாயே, தாழ்
[வன்ருே?
முக்காலம் தானுணரும் முனிவன் நீ ஏமாந்தால்
அக்கால் உன் அன்பால் ஏமாந்ததும் ஓர் அற்புதமோ?
நீ வஞ்சத்து ஆட்பட்டாய், நினை வஞ்சித்தான்
[தேவன்,
பாவம் சற்றேனும் இல்லாள் பழிகொண்டாள்,
[ஐயையோ!
யார் குற்றம்? நின் குற்றம், அவன் குற்றம், அற
[மகளின்
சீர்குற்றம் உற்றதிலே, சினக்குற்றம் செய்தாயே!
உடற்குற்றம் என்று சொன்ஞன் உயர் முனிவன் ;
[அது குற்றம் :

உடற் குற்றம் எங்கு வரும், உளக் குற்றம் இல்லை
[யென்றால் ?
கண்ணால் உனைக் கண்டாள், வானரசைக் காணவில்லை;
எண்ணத்து உனை ஏற்றாள், வானரசை ஏற்கவில்லை;
தேகத்தால் நினைத் தழுவும், வானரசைத் தீண்ட
[வில்லை ;
போகத்தால் ஆருயிரும் பொங்கி உனைத்தான் குழு
[வும்;
தன் கணவற்கு இச்சை தானளித்தல் குற்றமெனல்
புன் கணவர் சொல்லும் போத நெறிப் பொய் கண்
[டாய்!
ஒரு குற்றமும் புரியாள், உயர் கற்புக் குற்றத்தின்
பெருமைக்காய் இவ்வண்ணம் பிழை செய்தாய்
[போலும் நீ?
ஐயோ தருமமே! ஆண் வஞ்சனைக்காகப்
பொய்யாத பெண் பெருமை போயொழியப் பார்த்
வேதமே! வேத விதியே! விலைமகள் போல் [தாயே!
மாதரசின் கற்பழியா மாட்சி குலைத்தாயே!
கொடுமை செய்வார் கொடுமைக்காய்க் கொடுமையுற்
[றாள் வீழ்ந்தாளே!
நடுமையுற்ற நல்லறமும் நடுநடுங்கிப் போயிற்றோ?
நீ ஏற்க மாட்டாயே? - நினை ஏற்கச் சொன்னது யார்?
தீயேற்குமோ வேள்விச் சிதை ஈரம் புகை தந்தால்?
அவள் உன்னை ஏற்பாளேல், அதுவன்றோ பெருந்
[தன்மை?
தவளை ஒன்று பாம்பேற்கும் தனிச் சிறப்புக் காண்
[போமே!

ஆதலினுல், அடிபணிந்தே அவள் பொறுமை வேண்
[டிடு நீ!
காதலினுல் அல்லவெனில், கடமையினுல் கடன் தீர்ப்
[பாய்!
போவாய், அவள் காலில் விழுவாய், புரண்டழுவாய்,
"பாவாய்! என்பாவப் பழி தீர்ப்பாய்" என்றிரப்பாய்.
என்னப் பல சொல்லி ஏகென்முன் ஸ்ரீராமன்.
மன்னன் உரை கொண்டான் மதி கொண்டான் மா
[முனிவன்;
"தேவா! இன்று என் சிறுமை தீர்த்தாய்" எனப்
[போற்றிப்
பாவை அவள் அடிக்கீழ்ப் பணிகின்முன் கீழ்வீழ்வான்;
வீழ்வானை வீழாமுன் மேலெடுத்துத் தான் தாழ்வாள்;
தாழ்வாளைத் தாழாமுன் தானெடுப்பான் தழுவுகிமுன்.
இவ்வண்ணம் இருவோரும் இணைபிரியாது ஈண்
[டிருப்ப
மெய்வண்ண ராமபிரான் விடைகொண்டான் சென்
[முனே.

# ஜோதி உதயம்

1

கீழ்த்திசை வாளொளி பாய்ந்தது,
கிறுக்கிச் சிரித்தனன் சூரியன்!
வாழ்த்தி வணங்குது இவ் வையகம்,
மங்கலம் பாடுது மாகடல்,
தாழ்த்தி நகைக்கும் பரிதிப் பூ,
தாவி மலர்ந்தது தாமரை,
பாழ்த்த இருள் படுதாவிலே
பாய்ந்தது சித்திரப் பண்ணெலாம்.

2

கங்குல் கழிந்தது, மீனினம்,
காதற் கதிரவன் கோயிலில்,
திங்களின் நங்கையும் கூடவே,
சென்றதில் மூழ்கிச் சிறந்தது.
அங்கங்கு தோப்புகள், சோலைகள்,
ஆயிரம் மாமரச் சாலைகள்,
எங்கணும் நீண்ட நிழலெலாம்.
இன்பத்து ஜோதியில் ஆடுமாம்.

3

பழமை கழிந்தது, மாய்ந்தன
பாரகத் துன்பங்கள் யாவையும்;
விழைவொடு வந்தனர் மாந்தர்கள்,
மின்னெனப் போந்தனர் மாதரும்,
அழகுச் சிறுவிரல் குஞ்சுகள்
ஆயிரம் ஆயிரக் கோலங்கள்
இழையுமோர் இன்னிசைப் பாடலில்
ஏற்றிப் புகழ்வது காணீரோ!
போனவை போகப் புதுயுகம்

4

பூத்திடச் சூரியத் தேவனை,
வானகம் வையகம் யாவையும்
வாழ்த்து மணிக் கடல் தெய்வத்தை,
மோனக் கருக்கலில் பூத்ததோர்
மோகன ஜோதிக் குழந்தையை,
வானம் களிகொளப் பாடினோம்!
வையம் மகிழ்ந்தெம தாகவே!

# காலம்

1

காலமே, அழிவிலாக் ககனமே,
அன்றும், இன்றும், என்றும் ஆவாய்!

2

நின்னுடை அகண்ட நித்திய வானில்
கண முதல் கற்பக் கணக்கெலாம் பார்க்கில்
சிறிதும் பெரிதுமாய்ச் செல்லும் முகிற் கணம்.

3

ஆழ்ந்து அகன்ற நின் ஆர்கடல் அதனுள்
வருடங்கள் சிற்றலை, மாதங்கள் நுரைத் திரள்,
நாட்கள் மொக்குள், நாழிகை மொக்குளின்
உள்ளுறை காற்று, உருள் கணம் காற்றில்
உதறும் நுண் துளி.

4

போலி எண்ணங்கள், கேலிக் கூத்துகள்,
யாவும் நின் மாருதச் சூழலில் அழியும்;
வெற்றுரை ஆவேச வெறியில் உடைபடும்;
வயிர நெஞ்சக வண் சுடர் சிற்சில
மட்டுமே அழியாது மலரும்; ஆதலால்,
உண்மைக்கு நீயே உரைகல்.

5

சிப்பி உடையச் சிரித்திடும் முத்தெனப்
பழமைப் பேழையின் படல்களை உடைத்துப்

புதுமை உதயப் புன்னகை பூப்பாய்!
பழையதோர் உலகம் பண்ணிய மதுவைப்
புதுமை உலகத்துப் பொங்கொளிக் கிண்ணியில்
வார்ப்பாயாக, வாழ்த்தினோம், வழுதி!

6

செயல் பல நின்னைப் பிடித்திடத் திரிவன,
நின்னுடை வேகம் நினைக்கவும் பெரிதே;
ஆயினும்,
சிற்சில நலந்தரும் செயல்களை நீயே
பிடித்துமே இனிமைப் பெருமைகள் காப்பாய்.

7

பழமை போற்றுவோர் புதுமை கண்டு அஞ்சு
(வார்;
ஆயிரங் காலமாய் அருமையாய் வளர்ந்த
வளர்ச்சியைக் கணத்தில் நீ மாய்த்திடல் கண்டு,
உளம் நொந்து அழுவர், ஒண்சுடர்க் கதிரோன்
கழிவதற்கு அழுங்கிக் கருமுகில் போர்த்து
அந்திவான் கண்ணீர் சிந்துமேல், இந்துவின்
இளங் கதிர் இன்பமும் இழந்திடும் அன்றோ?

8

அழுகிக் கீழ் விழும் பழங் கனிக்காய் மரம்
அழுவதும் உண்டோ? விழுந்திடாது எஞ்சிய
புதுக் கனி காக்க விரும்பிடல் போல,
போனவை போக, நீ புதுமைகள் கொணராய்!
காலமே, நின்னை வாழ்த்தினோம், காப்பாய்!

## 9

பழமை என்னும் இருட்டறை பரவும்
சிற்றொளி விளக்கில் திரியிலே, எண்ணெய்
வரண்டது, சுடரும் மங்கியே இருளை
மிகுதிப் படுத்தும் மின்மினி போன்றது,
இருளைப் போற்றுவோர் போற்றுக, நாங்கள்
புதுயுக மாந்தர் புத்தொளி வேண்டினோம்.

## 10

சிதையா நின்னைச் சிதைத்தான் மனிதன்;
ஆனால்,
ஒவ்வோர் சிதைவும் ஒவ்வோர் சிதைவொடும்
பிரியா வண்ணம் பிணைந்தே யுள்ளது;
அதனை மானுடன் அறியான்.

## 11

முசுட்டை இலையை முடைப் புழுவாகி
நச்சிக் கறித்து நாளெலாம் உழைத்த
பிச்சை வாழ்வைப் பெரிதாய் நினைத்து,
பட்டுப் பூச்சி வான் பாய்ந்திடும் போது,
அழுவதும் உண்டோ? ஆர்வத்தோடு அது
விடுதலை பெற்று விண்ணில் பறத்தல் காண்!
பழமையே நின்னைப் படக்கென ஒடிப்பேன்!
நின்னுடைப் புதுமை வானத்து நீந்துவேன்,
காலமே! எனக்கு நின் புதுமைகள் காட்டாய்!

## 12

சென்றதோர் காலச் சிறப்பெலாம் பொங்கும்
தாஜ்மஹால் இன்பத் தழலினைக் காப்போம்;
ஆயினும், அதற்காய் ஆயிரங் காலமாய்
ஓட்டையாய் உளுத்து ஒடிந்திடும் குடிசையும்
காப்போம் என்றிடல் பேதமை கண்டாய்.

## 13

பழங்கால மேகங்கள் வருங்கால
மழை படைக்கும்;
ஆயினும்,
நிகழ்காலம் காற்றின்றிப்
புழுக்கமாய் நீண்டதுவே.

## 14

கிழவன் குழந்தைக் கிளர்ச்சியில் மகிழ்வான்,
முதியதோர் பழமை புதியதில் மகிழும்,
குழந்தை, கிழவன் போல் குற்றுயி ராகிப்
பழமைப் பாட்டனின் பருமனைக் கண்டு
ஏங்கிடில், இளமையும், வளமையும், இன்பமும்,
யாவும் இழந்து அழியும். அதுபோல்,
நீவீரும் பழமை நினைவை எண்ணுதீர்!
பழமை அனுபவம் பாரில் நம் துணை;
ஆனால் அது நம் அதிகாரி அன்று.

## 15

பழங்காலம் நிகழ்காலம் படைக்கும்; நிகழ்காலம்
வருங்காலம் வகுக்கும்; வளமையெலாம்
கொணர்ந்திடுவோம்,
காலத்தாற் கடந்த காட்சிகளைப் போற்றிசெய்து,
காலங் கழித்த கசடெல்லாம் விட்டுவிட்டோம்,
இறவாமல் இன்றுமுள இன்பங்கள்
போற்றிடுவோம்,
இறவாத புகழுடைய இன்பங்கள்
படைப்போமே.

# புது வருடம்

வேதாந்தி

காலத்திற் களவில்லை கணக்கில்லை யானாலும்
காலத்தைக் கூறிட்டோம் கணக்கிட்டோம்
வீணேகாண.
காலத்தைக் காண்பதற்காக் கடிகாரம் கவலையுறும்
காலத்தைக் கண்டதிலைக் கணங்கணமே கண்டதது.
அழியாத வாழ்க்கை யதுவேநாம் வேண்டுவது
அழியாத வாழ்க்கையிலை யழிநாட்கள்
பலகண்டோம்.
போனதுவாம் ஓராண்டு புகுந்ததுவாம் புத்தாண்டு
ஆனபயன் ஏதுமிலை யாவையுமே மாயையடா.

கர்மயோகி

பட்டமரம் மறுபடியும் பசுமையாத் தழைக்குமடா
கொட்டுமலர் வீழ்வதெலாம் கொஞ்சு
மலராவதற்கே.
சென்றதோ ராண்டினிலே செய்திட்ட செயலெல்லாம்
இன்றுவரு மாண்டினிலே ஏற்றம் படைத்திடவே.
கடமை செயல் நம்முரிமைக் கருது பயன் தெய்வம்
தரும்
மடமையடா சேம்பேறி வேதாந்த மாயமெல்லாம்.

ஞானி

ஆண்டாண்டாய்க் காலநதி அலைவீசி முன்னேறும்
மாண்டார் பிறப்பதிலை மாண்டகணம் மீண்டதிலை.
வட்டாடுஞ் சக்கரம்போல் மாறியின்ப துன்பங்கள்

கொட்டாரம் இட்டுவரும் கொஞ்சமும் நீ
அஞ்சாதே.
துன்பமின்றேல் இன்பமில்லை இன்பமின்றேல்
துன்பமிலே
துன்பமின்பச் சாயையடா இன்பம் துன்பத் தீபமடா
கணங்கணமும் துன்பத்தின் கட்டறுப்போம்
இன்பத்தை
கணங்கணமும் வரவேற்றே காலமெல்லாம்
வாழ்ந்திடுவோம்.
நித்தம் அழுக்காகுமென்று நீகுளிக்க வேண்டாவோ?
செத்தைகுப்பை சேருதென்று சேமித்து
வைப்பாயோ?
மேன்-மேலும் உள்வெளியாய் மேன்மேலும்
மூச்சுவரும்
மேன்மேலும் வாழ்க்கையடா மேன்மேலும்
இன்பமடா.
ஆன்மாவிலேநின்று அவனியெலா நன்மையுற
ஆன்மவிளக்காய் எங்கும் ஆனந்தங் காண்பாயே?

கவிராயன்

சித்திரையே! சித்திரையே! சிங்காரச் சித்திரையே!
புத்தம் புதுவருடப் பொன்கோயிற் கோபுரமே!
ஏவிளம்பிப் பண்ணையிலே என்னென்னவோ விளம்பி
ஆவலெனும் வித்திட்டோம் அவையெல்லாம்
பயனுறவே.
அன்புக்கரு விளம்பியறத்தின் திருவிளம்பி
இன்பத் திசை விளம்பி ஏற்றத்தொழில் விளம்பி
புத்தம் புதிய நலப்போதம் விளம்பியெம்முன்
புத்தம் புதுவிளம்பிப் புத்தாண்டே வந்தருள்வாய்.

# தேன் கிண்ணி

வானகத்துத் தேன் கிண்ணி
வையகந்தான் மூடியதோ?
வையகத்துக் கிண்ணியதை
வானகந்தான் மூடியதோ?
வான் மலரும் தாரகைகள்
வையம் விளைந்த கடல்
தேன் தவழ்ந்தே உண்ணுமொரு
தெய்விகமாம் காட்சி கண்டேன்.

வானகம் தேன் வார்க்கு மிந்த
வையகம் தேன் பூப்பதற்கே,
வையகம் தேன் கொடுக்குமந்த
வானகம் தேன் வார்ப்பதற்கே.
காதலிதான் மலரென்னில்
காதலனே கருவண்டு.
காதலன்தான் மலரென்னில்
காதலியே கருவண்டு.

என்னுயிரை ஏற்று
எனக்கதிக மாய்க் கொடுப்பாள்,
தன்னுயிரை ஏற்றுத்
தனக்கதிக மாய்த் தருவேன்.
நான் அவளாய், அவள் நானாய்,
நாடி ஒரு நல்லுயிராய்ப்
போன பின்னர், மலருமில்லை,
வண்டுமில்லை போனதுவே!

# ஆவணி

ஆடி குலுங்கிற்றிங் காறுகள் பொங்கின,
ஆவணித் தேன்மகள் வானத்துப் பூத்தாள்,
கோடி மலைச் சிகரக் குகை தூங்கும்
கொண்டல் சுருள்கள் நீர் வண்டலிட்டோடும்.

காரிருள் மேனிக் கருமுகில் போர்த்தாள்,
கதிர்விடும் மின்னல் கிறுக்கிச் சிரித்தாள்,
தீர்வரும் கங்குல் கனிபிழிந் தெங்கும்
தேனும் திருவும் செழித்திடச் செய்வாள்.

மெல்லியல் தாமரை மேனி மறையும்,
மின்மினி கோடிக் கணக்கினில் சூழும்,
அல்லியும் முல்லையும் மெல்லக் குலுங்கும்,
அளியினம் கிண்ணி மலருணப் போகும்,

கோகிலம் கொம்புக் குகையினில் தூங்கும்,
கூதலில் அன்றில்கள் கொஞ்சிக் குலாவும்,
தோகை விரித்து மயிற்குலம் ஆடும்,
தூக்கணப் பட்சிகள் ஏக்கத்து வாடும்.

வெள்ளை மலர் முறுவல் நகை செய்ய,
வீணைக் குரலினில் சோகம் தொனிக்க,
அள்ளிய பேரெழில் ஆசை மனைவி
அன்புக் கணவனைக் கூவுதல் காணுய்!

கூதல் அடிக்குது, கொஞ்சுது காற்று,
கூந்தல் கவிழ்த்துக் குலாவினள் முத்தம்
மாதர்க் கரசியோர் மங்கை நல்லாள் தன்
மஞ்சனைக் கூடி அணைத்திடல் காணாய்!

விருத்திரன் என்னும் வெறிகொளும் பாம்பை
வெட்டி மன் இந்திரன் மாரி கொணர்ந்தான்,
உருத்திர மூர்த்தி யெனக்கொடுங் கோபத்து
உலுக்கி நகைத்துக் கருணை பொழிந்தான்.

செந்தமிழ் இன்பம் சிறந்த கவிதை
தேன்பிழிந்து அன்னையைப் போற்றுவோம்
வாரீர்!

இந்து முகத்தை மறைத்தவள் நீட்டும்
இன்பங்கள் யாவும் பெறுகுவம் வாரீர்!

# வருஷப் பிறப்பு

காளியாத்தா—எங்கள்—காளியாத்தா—உன்
கருணை இருக்கவேணும் காளியாத்தா—புது
வருடம் செழிக்கவேணும் காளியாத்தா—நல்ல
வளங்கள் கொழிக்கவேணும் காளியாத்தா—காளி

வானகத்தே சூரியனை ராட்டை சுழற்றி—உருள்
வாரியலைப் பஞ்செடுத்து மழைநூல்பின்னி
கானகத்தில் பூநிறைத்துக் கனிகள் கொஞ்ச—பசுங்
கம்பளம் விரிப்பாளெங்கள் காளியாத்தா—காளி

ஆறுகுளம் குட்டையெல்லாம் தண்ணிநிரம்ப—மலை
யாளமின்னல் ஈழமின்னல் சூழமின்னவே
சேறுபடும் நிலமெல்லாம் கீறுகீறியே—கதிர்ச்
செந்நெல் செழிக்கவேணுங் காளியாத்தா—காளி

கொக்குடனே நாரையது கொஞ்சிடவேணும்—மீன்
கொத்திகளும் வட்டமிட்டுச் சுத்திடவேணும்
கெக்கலித் தவளைகத்திச் சொக்கிடவேணும்—மழைக்
கிளர்ச்சிப் பருவம் பார்த்துக் கொட்டிடவேணும்—
காளி

பானைநல்லாப் பொங்கவேணும் காளியாத்தா—
இன்பப்
படையல் படைக்கவேணும் காளியாத்தா
தேனும்பாலும் பொங்கவேணும் காளியாத்தா—
எங்கள்
தெம்பு நிறையவேணும் காளியாத்தா—காளி

மாடுகன்று வாழவேணும் காளியாத்தா—நல்ல
வரகுவைக்கோ லுயரவேணும் காளியாத்தா
வீடு நிறையவேணும் காளியாத்தா—வந்த
விருந்து மகிழவேணும் காளியாத்தா—காளி

ஆலேயிற் கருப்பஞ்சாறு பாய்ந்திடவேணும்—பஞ்
சாலேயிற் துணிமலேகள் சாய்ந்திடவேணும்
சாலேயில் போக்குவரத்து மிஞ்சிடவேணும்—கல்விச்
சாலேயெல்லாம் வித்தைநலம் விளேஞ்சிடவேணும்—
காளி

குத்துவிளக் கேற்றிவைத்துக் கும்பிடவேணும்—
பின்னும்

கோலமின் சரவிளக்கும் கொஞ்சிட வேணும்
புத்தம்புதுத் திட்டமொன்றும் தில்லிநகரில்—அதன்
புதுமை சிறக்கவேணும் காளியாத்தா—காளி

கழனியிலே வேலேசெய்து சேறுபடிய—வரும்
கணவரைப் போற்றவேணும் காளியாத்தா
அழகழகாக் குழந்தைகட்கே யாடையுடுத்தி—சின்ன
அணிகளும் பூட்டவேணும் காளியாத்தா—காளி

போன வருஷங்கண்ட புன்மைகள்நீங்க—இப்போ
போந்த வருஷம்நன்மை யாவுமே ஓங்க
தினக் குழந்தைகளேக் காளியாத்தா—காக்கும்
தெய்வம்நீ யன்றியுண்டோ காளியாத்தா—காளி

# மேரி மக்தலேனா

## காட்சிப் படலம்

1

மதியினைச் சுண்ணம் செய்து
வானவில் வர்ணம் தீட்டிக்
கதிர்மணி விளக்கம் தூக்கிக்
ககனமீன் சரத்திற் கோத்துப்
புதியமின் சிகரம் வேய்ந்து
பொன்சுடர் பளிங்கில் **தூண்கள்**
அதிசயக் காமன் வைகும்
அரண்மனை போன்ற மாதோ.

2

மதுகரம் மொய்க்கும் சோலை,
மதுச்சுனை யூறும் ஓடை,
சுதிபெறு குயிலின் கூட்டம்,
தூயவெண் சலவைக் கூடம்,
குதுகலத் தென்றல் வீச்சு,
குளிர்மதுக் கனியின் கொத்து,
விதவிதச் சிற்பக் காட்சி
விண்ணெலாம் பணியும் சூழ்ச்சி.

3

சந்திரன் தவழும் இன்பத்
தவள சாகரம் போல் முற்றம்,
சிந்துரக் கிரணக் கூர்மைத்
தினகரன் தீட்டும் சாணை,
இந்திரன் மனையை வெல்ல
எழுந்து வான் கூடும் மாடம்,
வந்துவந்து அணைத்துப் பெற்ற
மையலால் வெறிகொள் வீடு.

4

ஓவியம் இமைகள் மூடாது
உயர்மனை எழிலை நோக்கும்,
காவியம் கண்கள் மூடிக்
கனவுகண்டு அளந்து பார்க்கும்,
ஆவியை ஊற்றினாற் போல்,
அமுதத்தைப் பாய்ச்சினாற் போல்,
மேவிய சுவர்கள் எல்லாம்
மீனினம் நுழைந்தங் கார்க்கும்.

5

பவளத்துச் சட்டம் சூழ்ந்து
பரிதியைக் குடிக்கும் ஜோதித்
தரளத்தை வளர்த்துச் செய்த
சாளரந் தோறும் சந்தத்
தவளத்தில் மென்பூத் தைத்த
தளிரினும் மெலிய பட்டில்
குவளைக் கண் மாதர் கைப்பூக்
கும்பிட்டுக் குலுங்கும் சேலை.

## 6

மாணிக்கக் கதவ மெல்லாம்
மணிவிளக் கொளிகள் வீசும்,
வாணிக்கை மதுர வீணை
மந்த மாருதத்திற் பாயும்,
காணிக்கை யேந்தி நிற்கும்
கனிகளும் மலரின் கொத்தும்,
நாணிக் கண் சிமிட்டி மீன்கள்
நள்ளிருள் நடுவே பூக்கும்.

## 7

மண்ணுறு புண்ணியந்தான்
வானகம் ஏறிச் செல்லப்
பண்ணிய படிவமோ, இப்
பாரகத் தவத்தை மெச்சி
விண்ணருள் வியப்போ, காம
விஞ்சையோ, தழலிற் பாய்ச்சும்
பண்ணிசை ததும்பும் தெய்வப்
பதுமமோ, யாதைச் சொல்வாம்!

## 8

வாளரா விரியும் கூந்தல்
வாயிடை மதியம் போலச்
சாளரம் தோறும் தோன்றும்
தண்கதிர் முகங்கள் நோக்கி
வேளினைப் படைத்த திங்கள்
வெண்மகள் நாணி ஆங்கோர்
காளமா மேகப் பொந்தில்
கண்மறைந் திடுதல் காணாய்.

9

மின்னெனத் துவளும் மேனி,
வேயெனக் குழையுந் தோளில்
பொன்னெனக் கலசம் வீக்கிப்
பொய்யெனச் சரியும் காமன்
துன்னிய நிதம்பக் கோயில்
தோகை போல் சேடிமார்கள்
அன்ன மென் நடையராகி
ஆயிரம் பணி செய்வாரும் :

10

குடத்தினில் மதுப் பெய்வாரும்,
குடலையில் பூக்கொய்வாரும்,
தடத்தினை விளக்குவாரும்,
தளிரணை வகுக்கின்றாரும்,
மடத்தினைக் காமன் செங்கோல்
மாடத்தை அணி செய்வாராய்
விடத்தினில் அமுதம் கூட்டும்
விழியனார் உலவுகின்றார்.

11

தங்கத்துப் பாத்தி செய்து,
தரளத்தால் வரம்பு கட்டிப்
பொங்கொளிப் பங்கயம் போல்
புதுமணி பொறித்த தொட்டில்
எங்கணும் மலரின் கொத்தாய்
இலங்கிய சோலை நீங்கி,
மங்கல மனைபுக்கோ மேலீ
மன்மதன் கோயில் புக்கோம்.

12

சந்தப்பூங் கலவைப் பன்னீர்ச்
சாகரம் குடையுவாரும்,
இந்துவைப் பிளந்த கிண்ணத்து
எழில் நறவு அருந்துவாரும்,
பந்துருள் கொங்கை மாதர்
பதுமக்கை வருடுந் தோறும்
மந்திரப் பாவை போல
மயக்கத்தில் திகைப்புற்றுரும்.

13

தூணெலாம், சுவர்க ளெல்லாம்,
தோய்மணித் தரைக ளெல்லாம்,
வாணிலாத் தழுவும் மாட
முகடெலாம், வயிரக் குன்றக்
கோணெலாம் கோடா கோடி
மகளிரைக் கொடுப்ப நோக்கி
ஆணெலாம் மயங்கி, "யாரே
ஆசை நோய் தீர்ப்பது!" என்பார்

14

ஓவிய மெல்லாம் காம லீலையின்
உவகைத் துள்ளல்,
காவிய மெல்லாம் காதற்
கவிதைகள், மதனன் பாட்டு,
மேவிய சிற்பம் யாவும்
மீறிய கலவைக் காட்சி,
ஆவியைப் பற்று தந்தோ
யாவையும் மயக்கும் சூட்சி!

## 15

வீட்டினைச் சொன்னோம், அந்த
வீட்டினுக்கு உயிராம் இன்பப்
பாட்டினை, அமுதால் செய்த
படிவத்தை, மதனன் நாணில்
பூட்டிய புதிய மின்னை,
புன்னகைப் பெண்பால் தோன்றி
ஆட்டி இவ் வுலகை அள்ளும்
அழகினைச் சொல்ல வில்லை.

## 16

தண் கதிர் நிலவால் முற்றம்
பாற்கடல் சமைவதாகப்
பெண் கனி அமுதத்தோடு
பிறந்தவள் என்ன நின்றாள் ;
விண் மணி யாவும் சூழ்ந்து
வியப்புற நோக்கித் தத்தம்
கண் மயக்குற்று வானக்
காவினில் அசையா நின்ற.

வேறு

வான்கோழிகள் இடையே ஒரு
மயிலாடுதல் போலும்,
மீன் பாடிய வானத்தொளி
மேவும் மதி போலும்,
தேன் பாடிய மலரின்னிடை
செந்தாமரை போலும்,
மான் பாடிய விழியாரிடை
மரியாள் எனும் ஒரு மான்.

18

மேகம் தவழ் மதிபோலிருள்
அளகந் தவழ் முகமும்,
வேகம் தவழ் அலை மேவிய
கடல் போல் உருள் விழியும்,
பாகும் தெளி தேனும் தவழ்
பவளக் கனி இதழும்,
மோகம் தரு தரளக் களி
இள மூரலின் முதிர்வும்;

19

தழல் பாய்ந்திடும் மின்னல் சுவை
செம்பொன் தளிர் மேனி,
கழல் பாய்ந்திடு காந்தள் சிறு
விரலின் கதிர் விரியும்,
குழல் பாய்ந்தொளி உண்ணும், இரு
கண்பாய்ந்திருள் கொல்லும்,
நிழல் பாய்ந்தவள் நேர்காண ஓர்
சுவரேறியே நிலவும்.

20

அன்னம் அவள் நடை கற்பன
அணி சோலையில் உலவும்,
சின்னஞ் சிறு குயில் அன்னவள்
இசை கற்பன திரியும்,
மன்னும் இள மான் அன்னவள்
விழி மாயையை மகிழும்,
இன்னும் சொலல் என்என் என
மின் சேவை செய் மின்னுள்.

## 21

வெய்யோன் ஒளி வெப்பம்தனை
விரிதேன் குளிர் நறவாய்
மையோவிய மதியக் கதிர்
மையல் தரு வெயிலாய்ச்
செய்யோவியம் அனையாள் இளஞ்
செங்காலன நடையாள்
சையோக மென் மதனுகம
சரசக் கலை வாணீ.

## 22

வாடாக் கலை, குறையா திருள்
மறையாச் செழுந் திங்கள்,
மூடா இதழ், உதிரா தளி,
மூசா இள முளரி,
ஓடா திருள் ஓயா தழல்
பாயா தொளிர் மின்னல்,
தேடாத் திரவியம் மான் விழி
தேனின் மொழி மயிலாள்.

## 23

காலில் சுவை, தலையில் சுவை,
கணுவில் சுவை காட்டிப்
பாலில் சுவை போல் எங்கணும்
பதியும் சுவைக் கன்னல்,
ஆலித் தெழும் அமுதக் கடல்
கடையத் திரள் வெண்ணெய்
போலொத்தது வெயிலில் பட
உருகாத் தளிர் மேனி.

## 24

காலம் அவள் பொன் மேனியில்
கணமோர் எழில் காட்டும்,
ஞாலம் அவள் பாதத்திடை
நவமா மணி சொரியும்,
வாலைப் பருவக் காளையர்
வசமற்றவர் உளரோ?
சோலைத் தரு சுனை யாவையும்
சொக்கும் திரு உருவம்.

## 25

வான் எத்தனை, மண் எத்தனை,
மதி எத்தனை, விண் மீன்
தான் எத்தனை, பரிதிக் கதிர்
தழல் எத்தனை, உலவாக்
கோன் எத்தனை, குடி எத்தனை,
குலவும் திரு எல்லாம்
மான் ஒத்தவள் முறுவற்கு ஒரு
விலை ஒத்தவை இவையோ!

### வேறு

எண்ணிலாக் கண்கள் கொண்டங்கு
இமைப்பிலாது ஊழிக்காலம்,
கண்ணினால், கருத்தால், மற்றைப்
புலன்களால் கண்டாரேனும்,
விண்ணெழில் யாவுமே ஓர்
மின்னலை மேவிற்று என்னப்
பெண்ணெழில் எல்லை காண்பார்
பேருலகு இல்லை இல்லை!

27

அந்தி மீன் மறையும் போதங்கு
ஆயிழை தன்னைச் சூழ்ந்து
சிந்துரப் பவளச் செவ்வாய்ச்
சேடியர் சிங்காரிப்பார் ;
இந்துவைக் கழுவுவார் போல்
எழில் மதுக் கலவைச் சந்தச்
சந்தனப் பன்னீர் ஊற்றித்
தையலைக் கழுவுகின்றார்.

28

முடிமிசை வீழ்ந்த பன்னீர்
மோக லாகிரியில் சிக்கிப்
படிமிசைப் பாதமட்டும் பாய்ந்திடும் ;
பாய்ந்த பின்னர்,
கடிகமழ் தொட்டி ஒன்றில்
கவலையாய்த் தேங்கும், அன்னாள்
வடிவினை நிழல் கொண்டேனும்
வாஞ்சையாய்த் தழுவும் மாதோ.

29

பட்டினில் கருமை பூசிப்
பளபளச் செய்த கூந்தல்
சொட்டு பன்னீரின் துள்ளித்
துடைவரை தவழ்ந்து மேனி
தொட்டணைத்து இன்பம் கொண்ட
சுவையெலாம் நீங்கத் தன்னைக்
கட்டுவார் என்பதாலே
கண்கலுழ்ந்து அழுவ போன்ற.

## 30

பழகிய மாதரார்க்கும் படிவத்தைப்
பார்க்கப் பார்க்கக்
குழையுது நெஞ்சம் என்னின்,
குமரர்தம் நெஞ்சம் என்னும்?
விழைவினுக்கு எல்லை உண்டோ?
கணம்தொறும் வியப்புக் காட்டும்
அழகினுக்கு அவதி யாதோ,
அழகெலாம் ஒருங்கே கண்டால்?

## 31

ஆவியில் மென்பூத் தைத்த
ஆடையால் மேனி ஒத்திப்
பூவியல் நறுநெய் நீவிப்
புதுமணக் கதம்பத் தூளின்
ஆவியைச் சுருட்டி, ஆண்கள்
ஆவியைச் சுருட்ட என்றே
சீவிஅக் குழலைப் பின்னித்
தினகரன் வைரம் வைத்தார்.

## 32

கருமுகில் திரளின் கூந்தல்
கதிர்விடு வகிட்டு மின்னல்
திருநுதல் நிலவின் கீற்றுச்
செவ்வியில் விரியும் பட்டில்
கருநறும் சாந்தம் தீட்டிக்
கனகச் செம் மணிப்பொட் டிட்டுப்
புரியிருள் மதன்வில் போலும்
புருவத்தைப் புனைதல் செய்தார்.

33

செவ்வரி அமுதக் கீறல்
செறி மதுக் கடலில் ஜோதி
கவ்விய வண்டு வீழ்ந்து
களிப்புற நீந்துமாப் போல்,
வவ்வி ஓர் உவமை யின்றி
வலக்கணுக்கு இடக்கண் கூறும்
நவ்வியல் விழியில் மையாம்
நஞ்சினைத் தீட்டிவிட்டார்.

34

கன்னத்துச் சுழியில் காமக்
கற்பகக் கொழுந்து தீட்டிப்
பொன்னொத்த பொடியில் சந்தப்
பூஇளந் தாது பூசி
மின்னொத்த முறுவல் ஜோதி
விளக்கிடும் பவளச் செவ்வாய்
அன்னத்தை, மதுவின் செந்தேன்
அமுதத்தை அமுதம் செய்தார்.

35

வானுறு மதியம் வெல்லும்
வையக மதியம் போலும்,
தேனுறும் அமுதச் செவ்வாய்த்
திருமுகம் கலந்து கொஞ்ச,
மீனினம் இரண்டு வந்தங்கு
இருபுறம் மேவிற் றென்னக்
கூனிடும் வள்ளைக் காதில்
கூரொளித் தொங்கல் வைத்தார்.

36

மகரயாழ் வளையுந் தோளில்
மன்மதன் நாளம் தூக்கிச்
சிகரமாய்ப் பதுமம் போலும்
திங்கள் வாண் முகத்தைப் பூக்கும்
தகரநேர் சங்கம் பொங்கும்
தந்தத்தால் கடைந்த கண்டம்
நிகரிலா மணிப் பூண் பூட்டி
நிரப்பினுர் மறைந்தார் அந்தோ!

வேறு

மாம்பழம் ததும்பு செம்பொன்
மலைதிரண்ட கொங்கையில்
தேம்பொதிந்த குங்குமச்
செழுங் குழம்பு பூசினுர்,
பாம்பிரண்டு நெளிவ போன்று
பாயும் ரோம பந்தியில்
காம்பு கொண்டு கற்பகக்
கொழுந்து மின்னல் காட்டினுர்.

38

உந்தியம் தடத்தில் இன்பம்
ஊறும் ரோம ரேகைகள்
சந்தினில் தவழ்ந்து பொங்கும்
சாகரத்து மையலைக்
கந்தமும், கத்தூரியும்,
கதம்பமும் கமழ்தரச்
சந்திரன் நிலாவை ஒத்த
சல்லடத்து மாட்டினுர்.

## 39

துப்பிதழ் மடந்தை காம
சாகரம் துழாவவே
தெப்பமாம் இரண்டு செம்பொன்
செங்குறங்கு சூழ ஓர்
அற்புதம் கனிந்த பட்டின்
ஆடை கொண்டு மூடினர்,
எப்பதத்தும் யாவினுக்கும்
இனிமை காட்டல் ஆகுமோ?

## 40

பஞ்சினும் குழைந்த கஞ்ச
மலரினில் படைத்தவாம்
நஞ்சினும் கனிந்த நாட்ட
நாயகி பதங்களில்
நெஞ்சினில் கலக்க மின்றி
நித்திலத்து அணிச் சுடர்
வஞ்சியில் சுருட்டுவார்கள்
வன்மை என்ன வன்மையே!

## 41

அணிகள் யாவும் அழகுபெற்ற
அமுத மேனி அணைவதால்,
திணியும் இருளில் ஒளிசெய் வடிவு
தினகரற்கும் வாய்க்குமோ?
தணிவு சேரும் தழலில் இளமை
தழுவு ஜோதி பார்த்திடில்
பிணிகள் யாவும் முன் பின் என்று
பேசிடாமல் ஓடுமே!

வேறு

நிலவினை நிலவுசெய் நித்தில முறுவல்,
கலவியில் அமுதுகும் கனியிதழ்ச் செவ்வாய்,
உலையிடு மெழுகென உருகிய பார்வை,
குலவிய பந்துருள் கோமள விரல்கள் ;

43

பொன்செய்த மணமலர் பொருவிய சுவையின்,
மென்பனி ஆடையுள் மின்னிய வடிவம்,
கன்னலில் இனியதோர் கவிதைசெய் பேச்சு,
இன்நலம் யாவையும் ஏந்திய வல்லி ;

44

மின்னென, மானென, மயிலென, மிளிரும்,
அன்னமென் நடைபயில் அணிதவழ் பதுமம்,
புன்னகை இளமதி பொழிகதிர் நிலவில்
கன்னல் வில் மதன் இளங் காலென உலவும்.

45

வண்ணவாய் மதுமலர் மலர்ந்துள சுவையில்
கிண்ணவாய் மணிமலர் கிறிசெய்த மதுவும்,
பண்அளாய் ரசமுறு பல கனி, இவைதாம்
உண்ண வாய் ஊட்டுவர் ஓதிமம் அனையார்.

46

மணிவட மலரணை ஊசலில் ஊசல்
தணிவொடு பழகிட, சாமரை வீச,
திணிஇருள் மயங்கிய திங்களில் தென்றல்
பணிசெய் வீணையின் பண்ணுடன் ஆடும்.

47

ஒளியலை தாங்கிய ஓதிம வடிவில்
களிபெறு பஞ்சணை கமலமெல் இதழில்
கிளியொடு குயில்களும் கின்னரம் பாட
மிளிர்அமுது அனையவள் மேவியங்கு
அமர்ந்தாள்.

48

என்றுமோர் இயல்பினில் வழிவழி யேகும்
நன்றியில் பொன்விலை நசைபடு வாழ்வின்
வென்றி நல் அமுதிடை விடம் இசைவது போல்
இன்றவள் நெஞ்சில் ஓர் துளி துயர் இலகும்.

49

மூச்சொன்று அங்கு உள்ளூறும் மோகத்துக்
பாய்ச்சிய களரிடைப் படிந்தத ஞலோ [ கருமை
வீச்சொன்றில் மார்பகம் வெடித்திடப் பாய்ந்து
தீச்சுடர் போல வெம் தீயொடு விசிறும்.

50

தேன் தெவிட்டிடச் செயும் தேன்மொழி வாயள்
தான் தெவிட்டில தரும் தழல்மதுக் கலவி
மீன் தெவிட்டிடச் செயும் மின்னெனத் தன்னைத்
தான் தெவிட்டிட மனம் தயங்கினள் மயங்கும்.

வேறு

ஐயமுற்றனள் பெண் மேரி,
யாதெனத் தெரியாள், நெஞ்சம்
தொய்யலுற்று எதையோ எண்ணும்
துயரினல் மயங்குகின்ருள் ;

மெய்யெலாம் தளர்ச்சி காட்ட
வெறுத்தனள் காமம் என்னும்
பொய்யினுல் செய்த இன்பப்
புணர்ச்சியை மறந்தாள் மாதோ.

52

புலர்ந்துமே புலராப் போழ்தாங்கு
அலர்ந்துமே அலராப் பூப்போல்
மலர்ந்துமே மலராச் செவ்வி
மனத்திடை அயிர்த்தாள், காமம்
கலந்துமே கலவாக் காலைக்
கனவினேர் கதிர் போல் ஏதோ
நலந் தரும் எதுவோ ஒன்று
நங்கையைக் கவ்வி உண்ணும்.

53

பெண்ணெலாம் ஆண்மை வேண்டும்
பேரெழில் அமுதப் பெண்மைப்
புண்ணுலாம் காமப் புன்மைப்
புகையினுல் புகைந்த நன்மை
உண்ணுலாம் உயிரை யெல்லாம்
உருக்கும் ஓர் உணர்வில் தன்னைக்
கண்ணிலா நோக்குவாளாய்க்
கருத்திலாக் கருதுகின்ருள்.

54

ஆணெலாம் செல்வம் ஒன்ருே
யாவையுங் கொடுத்துப் புல்லும்
கோணிய வாழ்க்கை தந்தக்
குதுகலக் களரின் தீமை

பேணிலாள், ஆண்மை வென்ற
பெரியதார் வீரம் குன்ற
நாணிஞள் எனினும், நாணம்
நயந்திலாள் நயவா நின்ருள்.

55

வாசலில் குமரர் எல்லாம்
மாதராள் மயக்கத்தாலே
பூசலிட்டு ஒருவரோடங்கு
ஒருவரைப் பொருதும் காலே,
ஆசைவிட் டனளோ, அன்றி
ஆசையால் தியக்குற்ருளோ,
வீசுலே போல மூச்சு வெதும்பிட
வீணே சாய்ந்தாள்.

56

கிணற்றினில் ஆழத்து எங்கோ
கிளர்ந்தெழும் ஓசை போல், அங்கு;
உணர்த்தி ஓர் செய்தி அன்ஞள்
உயிரினுக்கு ஆழம் பூத்துத்
தணத்தணக் கொதிக்கக் காதுள்,
'காமத்தைத் தழுவேல்" என்று
குணத்தொனி செய்து மெல்லக்
குசுகுசுக் குலவிற் றம்மா.

57

உள்ளத்து மயக்கமோதான்!
உயிர்செயும் சாலமோதான்!
வெள்ளத்துப் பாயுங் கர்ம
வியப்பினில் தெவிட்டலோதான்!

நள்ளிருள் நடுவே துள்ளும்
மின்னென நடுக்கும் செய்தி!
கள்இதழ் விளர்ப்பச் செவ்வாய்க்
கன்னியைக் கலக்கம் காட்டும்.

58

இன்னதென்று உரைக்கொணுது இவ்
வின்பமோ துன்பமோதான்,
அன்னவள் உயிரை அள்ளி
அலக்கணுற் றிடச்செய் போதில்,
மின்னலின் திரளைப் போலும்
மேலவன் கருணை வீசி
முன்னி ஓர் வீதி எல்லை
முனையினில் வருதல் கண்டாள்

## வருகைப் படலம்

வானகம் இன்பத் திங்களின் நிலவால்
வனைந்ததோர் வெண்குடை பிடிக்கும்,
மீனின மெல்லாம் தமைச் செய்த
மேலோன் மேனியைஇமைப்பில நோக்கும்,
தேனக மலரின் கொத்தினுல்
தென்றல் சாமரை இரட்டுவ திரியும்,
மோன மாதவரும் முத்தரும் புகழும்
முதுகழற்கு எவை பணி முயலா?

2

வீதியில் திகழும் விளக்கொளி யெல்லாம்
மேலவன் மேனியில் மறையும்,
காதலில் தேவன் கால்படக் கனிந்து
கனகமாய்த் தரையெலாம் காட்டும்,
யாதெனச் சொல்வேன்! மற்றவர் நிழல்கள்
அவர்செயும் பவத்திருள் போலாம்;
மாதவன் நிழலோ, இருள் தவம் புரிந்து
மலரடி வருடுவ தொக்கும்.

3

மலையெலாம் மந்த மாருதம் தூதாய்
மன்னவன் சேவடி பணியும்,
கலையெலாம் அவன் வாய் மலரினில் புகுந்த,
கருணையோ அவன் கணில் கனிந்த,
விலையிலாக் காதல் அன்பெலாம் அவன்தன்
விரிநிலா முறுவலில் மலர்ந்த,
அலையெலாம் அன்று நுரைமலர் சொரிந்தங்கு
அருட்பதம் தாங்கிய அண்ணல்.

4

கண்ணிலார்க்கு எல்லாம் கண்அவன், செய்ய
கருத்திலார் கருத்து அவன் கனிவே,
புண்ணுளார்க்கு எல்லாம் மருந்தவன் புண்கள்,
பொறியிலார்க்கு அவன் பொறி புகலாம்,
விண்ணிலார்க்கு எலாம் விண் அவன், துயரம்
வீழ்ந்தவர்க்கு அவன் விழல் உயர்வு,
மண்உளர் வாழ்க்கை அவன் சுடர் மரணம்,
மற்றவர் சுகம் அவன் மேனி.

5

இருளினைக் கீறி அருணன் வந்தெய்தும்
இளவெயில் சுடர் அவன் வடிவம்,
மருளினில் சுருளும் புகையிலாத் தழலின்
மலர் அவன் மதிதவழ் முறுவல்,
அருளினில் பரந்தங்கு அன்பலை விசிறும்
ஆழியில் பூத்திடும் கண்கள்,
தெருளிலாத் தீமை யாவுமே அவன் முன்
தீப்படு பஞ்செனத் தீயும்.

6

அழகெலாம் பெற்ற அழகினுக்கு அழகாய்,
அமுதெலாம் அமுதுசெய் அமுதாய்,
விழைவெலாம் தீர்க்கும் விழைவதாய், அன்பின்
விளக்கெலாம் விளக்கிய விளக்காய்,
பழகினுல் புளிக்கும் சுவையலாது என்றும்
பழகிடப் பழகிடப் புதிதாய்க்
குழைவெலாம் தோற்றிக் குறைவிலா நிறைவில்
கோமளம் காட்டும் ஓர் குமரன்.

## 7

தோளினில் தொங்கித் தாளினில் தவழும்
தூய வெள்ஆடை ஒன்றுடையான்,
வேளினில் தெய்வ வியப்பலொம் காட்டும்
மேனியில் வேறணி அணியான்,
நாளொடும் பூத்த நறுமலர் வாயில்
நல் அமுதனைய மென் சொல்லான்,
பாழிடம் தன்னில் பார்வையால் கருணை
பாய்ந்திடச் செய்திடும் பரமன்.

## 8

தெய்வம் ஒன்றுளதாம் கோயிலில் எங்கோ,
திருவெலாம் பொன்னெலாம் அதற்கே
பொய்வகைக் குருக்கள் மூலமாய்த் தந்தால்
புண்ணியன் புண்ணியம் தருமாம்!
இவ்வகை மனிதர் தமை யெலாம் ஏய்த்தங்கு
இருப்பவரைக் கசை கொண்டு
நையவே புடைத்துப் புறத்தினில் ஓட்டி
நலஞ் செய்தான் நாதன் வந்தடைந்தான்.

### வேறு

மேகம் யாவும் ஓர் மின்னலில் கால் கொளும்
தாகம் தீர்க்கும் கருணையின் சாகரம்,
நாக நஞ்சினை நல்அமுதாக்கிடும்
வேகம் நீங்கிய மெல்லலை மெல்லுரு.

## 10

கஞ்ச முற்ற கனகக் கனல் ஒளி
விஞ்ச லுற்றவன் மேனி விளக்கினில்
பஞ்சை யுற்ற பவத்திரள் விட்டிலில்
தஞ்ச முற்றுத் தழலுறச் சாகுமால்.

## 11

கண்ணைக் கூசும் கவின்ஒளிக் காதலன்,
விண்ணைப் பாய்ச்சிய மெல்அமுதச் சுவைப்
பண்ணை ஊற்றும் பசுந்தமிழ் நெஞ்சினன்,
மண்ணில் ஞானத்து வாரி வழங்குவான்.

## 12

விண்ணும், மீனும், விரிகதிர் யாவையும்
பண்ணும் தேவன், பதுமப் பதங்களை
மண்ணில் ஊன்றி, ஓர் மாயத் துறவி போல்,
நண்ணல் உற்றனன் நல்லருள் பூப்பவே.

## 13

காரைக் கண்ட பயிரின் கதிர் என,
நேரக் கண்டதும் நெஞ்சில் தலைவனின்
சீரைக் கண்டு சிவந்த தண்ணீர் என,
ஊரைக் கொண்டது உவகையின் வெள்ளமே.

## 14

சங்கம் ஊதினர், பேரிகை சாற்றினர்,
பொங்கும் பன்னீர் இறைத்தனர், பூமழை
எங்கும் கொட்டினர், இல்லம் விளக்கினர்,
மங்கலங்கள் வழங்கினர் மாதரே.

15

தயிரில் மத்துறு சஞ்சல நெஞ்சினர்
உயிரை மேவும் உடல்களில் சூழ்ந்தனர் ;
அயர்விலாமை அவரவர்க்கு அன்னவர்
பயிலுமாறு அவன் போதனை பாய்ச்சினன்.

16

பூத்தது இன்னுரை, பூத்தது இளநகை,
பூத்தது அன்பினில் போதவிழ் பொன்மலர்,
பூத்தது எங்கணும் புண்ணியம், மேலவன்
பூத்த ஞானப் புனிதம் வந்து எய்தவே.

17

அன்னவன்தன் அருள் உருப் பூத்தழல்
முன்னும் வீதி முனையினில் பொங்கவே,
கன்னி மேரியும் கண்டனள், கண்டனள்!
பின் நிகழ்ந்த பெருமை என் சொல்லுவாம்!

வேறு

கண்டனள் விழித்தாள் மேரி,
காட்சி மற்று எவையும் காணாள்,
உண்டதோர் மயக்கக் காமத்து
உவரிநீர் மேனி யெல்லாம்
விண்டது, வியர்வையாகிக் கழிந்தது,
வேறு ஜன்மம்
கொண்டவள் போல, வெண்பொன்
கோமளப் பாவை நின்றாள்.

19

தீச்சுடர் கலவிப் புன்மைப்
புகையினுல் தீய்ந்த நெஞ்சம்
காய்ச்சிய வஞ்சமெல்லாம்,
கவடெலாம், சூழ்ந்து பொங்கும்
நீச்சினுக்கு எட்டாக் காமச்
சூறை, ஓர் நீண்டு விம்மும்
மூச்சினில் வெளிப்பட்டு ஓட,
மூர்த்தியை மூர்த்தம் செய்தாள்.

20

கழித்திடும் காமம் கண்ட
காளேயர் தம்மை வாட்டிப்
பழித் திறன் பாயும் பாவைப்
பார்வை, தன் சலனம் நீங்கி,
அழித்தலேக் கள்ளின் வாசி
அமுதமாய் நிரப்பிஞற்போல்,
விழித்த கண் விழித்தவாறு
வேறுள நோக்கா நிற்கும்.

21

கடவுளேக் கண்ட ஞானக்
களிப்பினேப் பெரியது என்கோ?
மடமையில் செய்த பாவ
வருத்தமே பெரியது என்கோ?
விடமுற வெதும்பும் காட்சி
வியப்பிஞல் மகிழும், பின்னும்
திடமிலா வெதும்பும், திக்கை
வெறித்திடும், திகைக்கும், சோரும்.

22

சின்னதோர் கொடியில் தொங்கும்
வேர்ப் பலாச் செறியும் பாவப்
புன்மை ஓர் பொருப்பாய்த் தோன்றிப்
பூவையை அழுத்தச் சாம்பித்
தன்னையும் தாங்கலாகத்
தளிரினில் குழையும் பாவை
அன்னம் ஓர் பதுமம் புக்கது
அனையளாய் அணையில் சாய்ந்தாள்.

23

தோழியர் தம்மைப் பாராள்,
தோய் மதுக் கீதம் கேளாள்,
நாழிகைக்கு ஒன்றாய்த் தன்னைப்
புனைந்திடல் நயவாள், பின்னும்
ஆழியின் திரையைப் போல் அங்கு
அலைபவர் தம்மைப் பேணாள்,
பாழிடம் தன்னைச் சும்மா
உற்றுற்றுப் பார்க்கின்றாளால்.

24

தன்னிலே தானாய்த் தன்னந்
தனியளாய், தழலில் காய்ச்சும்
துன்னிய பாவ மூட்டை
அல்லதோர் துணையற்றாளாய்,
என்னெனச் சொல்வது ஐயோ,
ஏந்திழை துயரக் `கோலம்!
மன்னும் இவ் வையம், வானம்,
மற்றெலாம் உருகும் சேதி.

## 25

காமுகர் காமம் எல்லாம்
கைவசம் கண்ட காமத்
தீமையே வடிவாய்க் கொண்ட
திருவினைத் தாங்கித் தாங்கிப்
பூமலர் அமளி பெற்ற புன்மையால்
பொருமிப் பொங்கித்
தாமரை முள்ளைப் பூத்த
தன்மையில் தைத்த மாதோ.

## வேறு

தாக மிஞ்சிய சண்பகக் கொடி
தழலில் இட்டதோர் தன்மையில்
வேக மிஞ்சிய பாவ நஞ்சின்
வெறிகொள் நெஞ்சம் கருகவே,
மோக மிஞ்சிய லாகிரிச் சுவை
மோகனச் சுடர் போன்றுளால்
தேகம் அஞ்சித் "தழுவிடேன்" எனச்
சேலையும் கழன்று ஓடுமாம்.

## 27

பூணெலாம் அவள் மேனி எங்கணும்
புண்ணுறச் செய் விலங்குகள்,
காணும் பார்வையும் காமம் காண்கிலாக்
கண் சொருகிக் கலங்குவ,
பாணி அன்னவள் பாவம் சூழ்ந்த
பழியில் சோர்ந்து படுத்தவாம்,
வாணிலா நகை இன்பத் தேன் இதழ்
வாய் வெளுத்து வரண்டுபோம்.

## 28

புரியைப் போலப் புரண்டு விம்மிப்
புடைத்த நாடி நரம்புகள்
திருவைப் பின்னிப் பிணைத்து நல்உயிர்
சேரத் தீரச் சிதைப்பதாம்,
கருமைக் காரிருள் நீழலும் தனைக்
கருமை செய் பவம் அஞ்சியே
விரியு நாற்புறம் கோடி கோடி
விளக்கொளிக்கண் மறைந்துபோம்.

## 29

கிள்ளை காமம் கிளுகிளுத்துப் பெண்
கிள்ளையைக் கீச்சி காட்டுமாம்,
உள்ளமோ 'வெடிப்பேன்' எனுத் தன்
உயிர்ப்படங்கிப் புழுங்குமாம்,
அள்ளு மேனி அழகு காட்டித் தம்
அன்பு காட்டு கண்ணுடிகள்
நள் இருண்ட முகத்தைக் காட்டிப் பின்
நங்கு காட்டுவ போன்றன.

## 30

சாளரத் திரைச் சேலை யாவுமே
சாலை போந்திடும் வாலிபக்
காளையர் தமை "வாரும்" என்று கை
காட்டிக் கூப்பிடல் போன்றன,
ஆள் அரம்பையர் யாவருக்கும்
அரம்பை பாவம் உணர்ந்தனள்,
"மீளும் போம்" என மின்னி மின்னி
வெருட்டல் போலத் துளங்குவ.

## 31

வன்னம் தீட்டி மயக்கம் காட்டி
வனைந்த சிற்பச் சிலையெலாம்,
மின்னும் ஜோதிச் சுவரில் மேவிய
ஓவியத்தின் வியப்பெலாம்,
அன்னம் மெல்நடை மெல்லியாள் பவத்து
ஆழி கண்ட மயக்கினுல்
இன்னலுற்றங்கு உயிர்ப்படங்கி
உன்மத்தமுற்றவை ஏய்ந்தன.

## 32

தேனைத் துள்ளி அங்கு அள்ளி வீசிய
தென்னல் இன்று சினத்தினுல்
மீனில் துள்ளிய கண்ணினுள் பவ
மிகுதியைக் கண்டு மீறியே
வானில் துள்ளி இவ் வையம் துள்ளிய
கனலெலாம் வாரி வாரி அக்
கானில் துள்ளிக் களைத்து மேரி
கலங்குறத் துயர் காட்டுமே.

## 33

பூவெலாம் பவப் பூவை காணப்
பொறுக்கிலாது இதழ் மூடுமாம்,
காவுலாவிய புள்ளெலாம் தங்கள்
கண்மயங்கி உறங்குமாம்,
ஒவிலாது அவள் செய்த தீமை
உலகம் எங்கும் இருள் எனு
மேவித் தம்மை விழுங்கும் என்ன
விளக்கினங்கள் மினுக்குமாம்.

## 34

திங்கள் என்னும் விளக்கம் ஏந்தித்
திணிந்த காரிருள் நீங்கவே
கங்குல் கன்னியும் வந்தடைந்தனள்,
தன்னைப் போல் ஒரு காரிகை
பொங்கும் தீமைப் புகை சுருட்டப்
பொருமுவாள் துயர் காண்கிலா,
மங்கி நாணி மயங்கித் தன் கை
மதி விளக்கை மறைக்குமாம்.

## 35

மீனம் யாவையும் கண்சிமிட்டி
மினுக்குக் காட்டிச் சிரிப்பன,
வானம் எங்கணும் மேகம் மூடின,
வையம் காரிருள் மூழ்குவ,
ஞான நாயகன் ஏசு வந்திட
நங்கை உண்ட பவத் திரள்
ஈனம் யாவும் வெளிப்படும் பொழுது
யாவையே இருளாதவே!

### வேறு

தன்னுடைய பாவம்
தரணியெலாம் சூழ்வதுவோ,
மின்னிடையாள் பாவத்தை
மேதினிதான் வெறுப்பதுவோ,
என்னுடையாள் தீமைக்கண்
ஈட்டு பவம் அல்லாமல்
மன்னுடைய மாதேவன்
மலரடிக்கண் வார்த்திடவே.

37

விம்முகின்றாள், வியர்க்கின்றாள்,
வெப்பத்தால் வெதும்புகின்றாள்,
பொம்முகின்றாள், பொருமுகின்றாள்,
பொங்குகின்றாள், புகைகின்றாள்,
மம்மருறும் காம
மயக்கத்துச் சூழலிலே,
அம்மம்ம, அவள் துயரம்
யார் உரைக்க வல்லாரே!

38

பெண்ணீர்மை எல்லாம்
பிழைபோகக் கண்டவளே,
புண்ணூறும் நெஞ்சத்துப்
பெரும் பாவம் பூண்டவளே,
கண்ணீரும், கம்பலையும்,
கவலைப் பெருமூச்சும்,
தண்ணீராய்க் காமத்
தழல் நீறாய்த் தாம் உருக்கும்.

39

விழுந்து விழுந்து எழுந்து எழுந்து
வெய்யிலிட்ட புழு என்னக்
கொழுந் தழலின் மெழுகு என்னக்
கொடி என்னக் குலைகின்றாள்;
தொழுந்தகைய சுடர் மேனி
துவண்டு துவண்டு அலை புரள
அழிந்தழிந்து மதி மருண்டு அங்கு
அலை கடலாய் அரற்றுகின்றாள்:

40

"ஆண்களிலே, பெண்களிலே,
அலிகளிலே, யாவரிலே
பேணும் இன்பப் பேரழகு
பெற்றதனைக் காசுக்காய்க்
காணுமவர் யாவருக்கும்
கைவசமாய்ச் செய் புன்மைப்
பூணுடையார் என்னைப் போல்
புவியின்மிசை வேறுளரோ?

41

"உண்பதுவும், உறங்குவதும்,
உடுப்பதுவும், காளையரைக்
கண்மயக்கால் வாட்டிக்
கலப்புதுவும் அல்லாமல்,
பெண் பயன்தான் வேறிலையோ?
பிழையன்றோ? பேதையினேன்
கண் குருடாய்க் காமக்
கருக்கலிலே வாழ்ந்தேனே!

42

"முடுவல் ஒன்றங்கு, அதை வீதி
முனைவரையில் தொடர்ந்து செலும்
கடுகுரல் நாய்த் திரளதனைக்
கணக்கெடுப்பார் யாவருளர்?
படுகரிலே, காமப் பழியினிலே
பாழ்த்த எனைத்
தொடுவதற்கும் சூழ்வதற்கும்
தொல்லை செய்வார் எல்லையிலார்.

43

“நாணில்லேன், நடுங்கில்லேன்,
நலமில்லேன், தீமையுறக்
கோணில்லேன், குழைகில்லேன்,
கொடுமையெலாம் கைவந்தேன்,
ஆணுள்ளார் யாவரையும்
பேடியராய் ஆக்கிவிட்டேன்,
பேணும் இந்தப் பெரும் பாவப்
பிழைதீர்க்க வல்லேனோ?

44

“அறிவறிந்த நாள் முதலாய்
அன்று முதல் இன்று வரை
பிறிதறியேன் ; காமப்
பெருஞ் சூதும், வஞ்சனையும்,
நெறிஅறியாக் காளையரை
நெருக்கிப் பொன் பறிப்பதுவும்,
குறிஅழியக் கலவியிலே
கோப்பதுவும் அல்லாமல்.

45

“குலமகளாய்ப் பிறந்தும் எந்தன்
வறுமையுறும் கொடுமையினால்
நலம் இழந்தேன், காமம் எனும்
நஞ்சுண்டேன், நானிலத்தில்
விலைமகளாய், புலைமகளாய்,
வெறுமகளாய்க் கழிந்தேற்கும்
அலைமகள் சேவடி தாங்கும்
அண்ணல் அருள் வாய்த்திடுமோ?

46

“வானகமே! மண்ணகமே!
மற்றகமே! மாவிதியே!
மோனகமா முனிவர்களே!
தேவர்களே! மும்முதலே!
ஈனமுறும் காமத்தால்
எழில் குறைந்த என் உயிரைத்
தீனமுறச் செய்யச்
சிறிது வழி காட்டீரோ?

47

“தந்தையரே! தாயே!
தமியேனைப் பெற்றெடுத்த
முந்தையரே! பள்ளி
முதியவரே! நீவிரெல்லாம்
சந்தனத்தைச் சேற்றுச்
சதுகரிலே ஊற்றுவ போல்
எந்தனையே புன்மைக்கு
இரையாக்கி விட்டீரே!

48

“சந்திரனே! சூரியனே!
கண்சிமிட்டும் தாரகையே!
அந்தரத்து வானத்து
அலைகின்ற மாமுகிலே!
இந்த உலகத்து இயற்கை
யாவையுமே காண்கின்றீர்!
எந்தனைப் போல் பாவி
எவரேனும் கண்டுளீரோ?

## 49

'கூனிடுவாய், குறைந்திடுவாய்,
கொடுங் கறுப்புக் களங்கமுளாய்,
மீனம் எல்லாம் நகைசெய்ய
விரி அரவின் வாய்ப் படுவாய்,
வானுறுவாய் என்றாலும்,
வான் மதியே! என்னைப் போல
ஈனமுறும் தொழில் செய்தே
இவ்வண்ணம் ஆனாயோ?

## 50

'ஓயாது உருண்டுருண்டே
உலைகின்ற மாமுகிலே!
தீயான மின் வாளால்
தினம் செருக்கப் படுகின்றீர்!
பேயான பேராசைப்
பேரிடியால் குமைகின்றீர்!
ஆயாது எனைப் போல
யாதேனும் செய்தீரோ?

## 51

'பொங்கிக் குமுறிப்
புடைபுடைத்துப் போராடி
எங்கெங்கும் பாய்ந்தே
இடி போல் குரல் எழுப்பிச்
சங்கடத்தால் அலையும்
சாகரமே! என்னைப் போல்
பங்கமுறும் செயலால்
இவ்வண்ணம் பட்டாயோ?

52

'வண்டு தரும் தூசி
மகரந்தப் பொற்காசைக்
கண்டு வந்து மலர் மகளின்
கள்விற்கும் கான் மரமே!
தொண்டை வாய்க் கள் விற்கும்
எனைப் போலச் சூழ்ந்ததனுல்
திண்டு முண்டாய்ச் சூறைத்
திசைக் காற்றில் ஆடுதிரோ?"

53

என்று அழுங்கும் வேளையிலே
ஏசுவெனும் மாதேவன்
நின்ற நெடுந் தெருவே
நெடுந்தூரம் போய்விட்டான்;
மின் தவழ் மெல் இடை நோவ
வெறும் வீதித்னைக் கண்டு,
ஒன்றுரையாள், உணர்வழிந்தாள்,
உலகெல்லாம் மறந்தாளே.

54

துள்ளினுள், பாய்ந்தாள்,
துடித்தாள் ஒரு கணத்தில்
வெள்ளிடையே வந்தாள்,
வீதிவழிப் போகின்ருள்:
நள்ளிரவில் பூக்கும்
நன்மதி போலே உயிரை
அள்ளும் ஒரு பேரமைதி
அவனியெலாம் சூழ்ந்ததுவே.

# கண்ணகி

1

கேட்டனள், எழுந்தாள், துன்பக்
கிளர்ச்சியின் பொருமலோடு,
வாள்தடம் கண்ணீர் சோர,
மார்பகம் புடைத்து விம்ம,
'நாட்டுள வேந்தன் செய்கை
நன்றிது! நன்றிது!' என்னுக்
கோட்டிய புருவத்தோடு
குதித்தனள், குமுறுகின்ருள்.

2

திங்களின் முகத்து வெய்ய
தினகரன் தழல்கள் சேர,
கொங்கலர் கூந்தல் காலன்
கூற்றுறழ் பாசம் ஒப்ப,
கங்குலின் நெருப்புப் போல்வாள்
கற்பெனும் கனலி நின்ருள்:
மங்கையாள் சீற்றங் கண்டார்
வானவர் மறுக்கம் கொண்டார்.

3

'என்னுடை உயிரை வாளால்
ஈர்த்தனர்; இனி என் செய்கை?
மன்னுடை மதுரை மூதூர்
வாழ்வெலாம் சுடுவேன்!' என்று,
மின்னிடை மெல்லியாளின்
மேனியின் ரோமம் எல்லாம்
புல்நுனி வாளாறுற் போல்
பொங்கிய, புகைந்த மாதோ.

4

பொற்பெலாம் சுமந்த மேனிப்
புண்ணிய வடிவத் தேவி,
கற்பெலாம் தஞ்சம் கொண்ட
காரிகை, இல்லின் தெய்வம்,
வெற்பலாம் இடிக்கத் தக்க
வெறியளாய் வெகுண்டு நிற்கும்
அற்புதச் சீற்றம் கண்ட
தெய்வமும் அஞ்சிற்று அன்றே.

5

தான் செய்த காதல் தண்மை
தனி எரி யுற்றுப் பொங்கி,
வான் செய்து மண்ணுஞ் செய்த
வலிக்கெலாம் வலிமைத்தாகி,
கோன் தவச் சிவனின் நெற்றிக்
கண் எனக் குமுறல் பார்த்து,
தேன் செய்த மலரின் தேவன்
திகைத்து வாய் புதைத்து நின்றான்.

6

'ஊழியோ! ஊழித் தீயின்
உறுமலோ! உறுமி நிற்கும்
ஆழியோ! ஆழி தூர்க்க
அலைத்திடும் சூறைக் காற்றோ!
சூழிய பேய்கள் சுற்றும்
சூரியோ!' என்றென்று அஞ்ச
ஏழினோடு ஏழாம் அண்டம்
யாவையும் கலக்கும் சீற்றம்.

7

நெற்றியில் புடைக்கும், காலால்
நிலம் புக மிதிக்கும், கையால்
பற்றித் தன் கொங்கை பிய்க்கும்,
படபடத் துடிக்கும் வாயள்,
உற்றுற்று வெறித்துப் பார்க்கும்,
உன்மத்தமாகி நிற்கும்,
சிற்றிடைச் சிறுமி கற்பின்
சீற்றத்தின் வலிதான் என்னே!

8

'தெய்வமே! தெய்வமே!
இச்சிறுமி நீ என்னைச் செய்ய
உய்வையோ? உய்வையோ?"
என்று உரப்பினள்: உரப்பலோடும்,
மெய் எனும் வேதம் காண,
விண்ணவர் முனிவர் காணத்
தெய்வமும் அஞ்சி அண்டத்து
அப்புறம் சென்ற தன்றே.

9

கற்பெனும் கனலின் நேரே
    கடவுளின் வலி என் செய்யும்?
நிற்பன திரிந்த, மாறித்
    திரிந்தன திகைத்து நின்ற,
கற்பமும் முடிந்த போலக்
    கதிரவன் குருடனுனன்,
அற்புதக் கற்பின் மேல் ஓர்
    அருந் தவப் பெருமை உண்டோ?

10

பிறங்கிய சீற்றச் செந்தீ
    பிளந்தது விண்ணும் மண்ணும்,
உறங்கிய கால வெந்தீ
    சுரிப்புற ஒளிந்து போய,
'மறங்கடை செய்த மன்னன்
    வல் உயிர் மாய்ப்பேன்!' என்று
கறங்கென மதுரை மூதூர்
    கலங்குறத் திரிந்தாள் அன்னே.

11

கையில் ஓர் சிலம்பு தாங்கி,
    காலிலே சூறை தாங்கி,
மெய்யிலே நெருப்புத் தாங்கி,
    விழியில் தீக் கணைகள் தாங்கி,
தையலாள் கோபம் தாங்கித்
    தமியளாய்ப் போதல் நோக்கி,
ஐயமில் அறமும் கண்ணீர்
    அலக்கணுற்று அழுத மாதோ.

## 12

பூங்கொடி மின்னில் பாய்ந்து,
புன்னகை இடியில் பூத்து,
தூங்கொளிச் சிலம்பு காலன்
சுடரொளி சுழற்றிக் காட்ட,
பாங்குடை மன்னன் செங்கோல்
பழி மிக வளைந்து போன
தீங்கினைத் தீங்கு செய்யும்
தெய்வமாக் கனலாய் நின்றாள்.

## காதல்

பிள்ளைக்கு மணம் பேசும் பெரியவரே கேளுங்கள்!
நொள்ளைச்சிறு வாழ்வில் நொந்தவரே கேளுங்கள்!
பெண்ணே யிழிவென்றும் பெண்ணோடு பேசுவது
எண்ணரிய பாவமென்று மேதேதோ வுளருகின்ற
பிச்சைச் சிறுபேதைப் பேய்மக்காள்! உங்களுடைக்
கொச்சை வழக்கக் கொடுமைகளைப் பேசிடவோ
கல்லிமக்காள்! நீவிர் காதலுக்கு வேலியிட்டு
பில்லத் தனமென்று பிழையாக்கி வீரியவள்
கள்ளை யமுதைக் கவிவெறியை காவியத்தை
வெள்ளச் சுவையை வியன்மதுவை யிளமையினைப்
பாட்டைக் கூத்தைப் பண்ணைக் களிப்பைமலர்
காட்டு மழகை நறவை கைபுனையா
உலகத்திலுள்ள உயிர் பொருள் யாவினையும்
இலகவைத்த தேவ யின்பமதுப் பெண்ணை
மக்களைக் காக்கவந்த வானத்துத் தேவதையை
துக்கம் கெடுக்குந் தூய்மைச் சிவமகளை
ஐயோ! நீவி ரவதிசெய்து வாழுகின்றீர்
பொய்யே! மொழியும் புல்லர்களேபெண்கள்தமை
அடிமை யெனக்கருதும் மறிவிலிகாள், நும்மனைவி
குடிமைத் தலைவியலோ? கொற்றத் திருவல்லோ
பெற்றெடுத்த மாது பெண்ணல்லோ? தெய்வமல்லோ
குற்றமிட்டு மழகைக் கொல்லுகின்ற பிச்சர்களே!

பெண்படைத்தா ளிவ்வுலகைப் பெண்வளர்ப்பாளிவ்
[வுலகை
பெண்கடவுட் சக்தி பேயழிப்பா ளிவ்வுலகை
பெண்ணைப் பிழைத்திரேல் பேரின்ப மெங்குமின்பக்
கண்ணை யழிப்பதன்றே காதல்தனை யழித்தல்
பெண்ணிலையேல் வாழ்வுப் பெரும்பாழ் காணிப்பூமி
மண்ணக மேயோர் மாயச்சுடலை யன்றோ?
பெண்ணென்றால் தமிழில் பேரழகுத் தேவியன்றோ?
கண்ணன்றோ மக்களுக்கும் காதலுக்கும் கடவுளுக்கும்
கற்பென்று பெண்களிடம் கதைபேசி யாண்களெல்
[லாம்
கற்புத் தவறல் கடவுளுக்கு நேராமோ?
வீட்டிலோர் மூலை யடுக்களையில் விண்ணவர்தம்
பாட்டுச் சிறுமிகளைப் பழியுறுத்தல் குற்றமன்றோ?
கற்புத்தனைக் காக்கக் கண்ணுலஞ் செய்திடுவீர்
வற்புறுத்த லப்போ வழுவன்றோ பேதையர்கள்
பத்து வயதுடைய பாலைச் சிறுமியிடம்
செத்துவிழுங் கிழட்டுச் சீமானைக் கொள்ளென்பீர்
பெண்களிட மறிவு பிழையென்று பேசிடுவீர்
பெண்கள் கற்புப் பிறழுமென்று பொய்யுரைப்பீர்
கட்டினு லுடலை கட்டுதலாம் நெஞ்சகமும்
கட்டுப் படுமோ? கடுகளவுங் கருணையிலீர்!
அடிப்பீ ருதைப்பீ ரன்பூற்றும் பெண் சுவையைக்
குடிப்பீர் பின்பவளைக் கொன்றிடுவீ ரம்மாவோ!
சோலையிலே காவினிலே தோப்புத் துறவினிலே
நீலமலை யிடத்தே நிலவினிலே மாலையிலே
ஆற்றங் கரையினிலே அமுதூற்றி வீசுதென்றல்
காற்றின் கனிவினிலே கலவிதனை மாய்த்துவிட்டோ

குட்டி யறையின் கோட்டிலொரு கட்டிலிலே
பொட்டி யரவு பொருமுதல்போல் புழுங்கியின்பக்
காத லறியாத காமக்க ணச்சுவையில்
போதைக் கழித்தோ புதுக்கலவி யின்புறுவீர்
பாட்டினி லேகாதல் வெறுப்பீர் மதியில்லீர்
காத லுலகத்து முதன்மைக் களிப்பன்றோ
காதலுயிர் பயிரைக் காக்கின்ற வேலியன்றோ
காதல் கவலைச் சருகெரிக்குங் காட்டுத்தீ
காதலுலகக் கடல் கடக்கும் தோணியன்றோ
காதல் பெறுதலெனில் யாதும் பெறுதலன்றோ
காதலிலையேல் யாதிருந்து மென்ன பயன்?
மூடமனிதர் காதலுக்கு முட்டி யிட்டுக்
கேடுமிக வாக்கிக் கெட்டுவிட்டா ரென்னசெய்வோம்
காதலே! வானகத்துக் காவியமே! கவிப்பெண்ணே!
சாதல்தனை நீக்கிச் சஞ்சலங்கள் தீராயோ
பெண்ணுமாணும் பிரியமுற ஓர் சமனுய்ப்
பண்ணும் பாட்டும் பரநிலையும் கட்கூத்தும்
கண்ணின்மணி யின்பக் கல்விக்கனிச் சுவையும்
மண்ணுலகை வாளுக்கி வாழ்ந்து மகிழ்வாரோ
கட்டைப் புறம்வீசிக் களியாட்டக் கூத்திட்டு
பட்டு மகளிரிடம் பாட்டுமொழி பேசுவாரோ
கற்புநிலை பிறழாக் களவுசெய்து வாழ்ந்திட்டு
பெற்புநிலை தவருப் புகழ் வாழ்வு வாழாரோ?
இந்த உலகையொரு இன்பத்திரு உலகாய்
கந்தர்வர் வாழும் களியாட்ட பூமியதாய்
சாவை நொறுக்கித் தனிக்காதல் செய்திடுவீர்
தேவக் களிப்புத் திகழ்ச்சி யருந்திடுவீர்
காதல் செய்வீர் அன்றே கவலை யொழிந்துவிடும்

வேத மனிதர் விண்ணுகும் பூமியெலாம்
காலேக் கதிரோனும் காதலொளியாவான்
மாலே வெயிலும் மதனப் பொடிக் காற்றும்
வெள்ளே நிலவு வீணைக் குரல் கொண்டு
வெள்ளத்துக் காதல் விண்ணிற் பொழியுமப்போ
வான்மணிகள் எல்லாம் மாயவெறியூட்டும்
தேன் மலர்கள் காதல் தேசமிக வீசிவிடும்
தென்றலின்பத் தேன் மொழிகள் பேசி வரும்
மன்றுப் பறவையெலாம் வானநிலே வாழ்த்தும்
துட்ட விலங்குகளும் துன்பப் பெரும் பாம்பும்
கிட்டி விளேயாடிக் கேண்மை விரும்பு மப்போ
காதலுலகத்து அமுதங்காண் கற்பக காண்.

# காதல் வெள்ளம்

குப்பன்

கூதல் அடிக்குது, தூறல் சிணுங்குது,
குச்சு நடுங்குது, குப்பச்சீ!
ஆதர வற்றிந்தக் காரிருள் மூட்டத்தில்
அம்பிட்டுக் கொண்டோமே, குப்பச்சீ!

குப்பச்சி

கூதல் அடிக்கிலென், தூறல் சிணுங்கிலென்,
குச்சு நடுங்கிலென், குப்பண்ணு?
காதல் வெள்ளத்தினுல் கார்மழை வெள்ளத்தைத்
கடக்கல் ஆகாதோ, குப்பண்ணு?

குப்பன்

மின்னல் விளக்கு வெடிக்க இருளதை
மீண்டும் விழுங்கி உருளுது பார்!
சின்னஞ் சிறியதோர் லாந்தரும் இல்லையே,
சேர்வழி எப்படி நாமறிவோம்?

குப்பச்சி

மின்னல் விளக்கு வெடிக்க இருளதை
மீண்டும் விழுங்கி உருண்டிடில் என்?
அன்னை பராசக்தி நம் அகத்து ஊட்டிய
ஆசை விளக்கும் அவிந்திடுமோ?

குப்பன்

எட்டுத் திசையும் இடிந்திடப் பேரிடி
எக்காளம் இட்டுக் குதிக்குது பார்!
கொட்டும் இசைக் குயில் கோமளமே, புயல்
கோபத்தை எப்படி மாற்றிடுவோம்?

குப்பச்சி

எட்டுத் திசையும் இடிந்திடப் பேரிடி
எக்காளம் இட்டுக் குதித்திடில் என்?
கட்டுப் படுத்த நம் காளித் தெய்வம் தந்த
காதலின் மந்திரம் ஈண்டிலையோ?

குப்பன்

இந்திரன் வைரப் படைகொண்டு மேகங்கள்
எங்கணும் ஓட்டி மகிழ்ந்திடுவான்,
அந்தர மீனினம் யாவும் ஒளித்தது,
யாமும் ஒளிக்க வழியிலையே!

குப்பச்சி

இந்திரன் வைரப் படைகொண்டு மேகங்கள்
எங்கணும் ஓட்டி மகிழ்ந்திடில் என்?
மந்திரத் தெய்வதம் காளியம்மன் தந்த
மையலின் மந்திரம் உண்டு கண்டாய்!

குப்பன்

சந்திரன் ரோகிணித் தையலுடன் கூடோர்
சந்துக் குகையினைச் சார்ந்துவிட்டான்.

குப்பச்சி

இந்து இளம்பிறை பூண்ட சடையினள்
இன்பப் பதங்களைச் சார்ந்திடுவோம்.

குப்பன்

கார் மழை வீச்சினில், வெள்ளத்துப் பாய்ச்சலில்,
காசினி மேனி கரையுதடீ!

குப்பச்சி

கார்மழை மேனியள் காளியம்மன் தந்த
காதலில் மேனி கரைந்திடுவோம்.

பொது

என்றுரைத்து இன்பம் குலாவிடும் வேளையில்
எங்கிருந்தோ பெரு வெள்ளம் ஒன்று
குன்றின் முகட்டில் குதிக்கும் அருவியில்
கொந்தளித்துப் பாய்ந்து வந்ததுவே.

காதல் கலவியில் கண்இரண்டும் மூடிக்
காசினி யாவும் மறந்திருந்தார்;
மோதிய வெள்ளத்தின் மூர்க்கம் அறிந்திலர்
மோகனக் காதலில் ஆழ்ந்துவிட்டார்.

காதல் கண்டோம் இனிச் சாதல் இலை எனக்
காட்டிய பல்லவி கேட்டதுவே!
மோதிய வெள்ளத்து மூழ்கினர்; யாவுமே
மோதிய வெள்ளத்து மூழ்கினவே!

# மேனி நலம் வியத்தல்

1

என்னென் றுரைப்பே னடீ! — நின்
    இன்ப நிறை மேனி நலம்
பொன்னி லமுதினிலே — காதல்
    போதை மதுப் பிழிந்தே
மின்னல் தனைக் கொணர்ந்து—உந்தன்
    மேனியெங்கு மூற்றி யேதான்
பின்னரோர் பெண் பிழம்பாய்—செய்த
    பேதை யுருவ மோடீ

2

மாந்தளி ரின் பசுமை — தன்னில்
    மாம்பழத் தினின் சுவையும்
தீந்தேன் திரளூற்றியே—காமம்
    தேங்கித் தளும் பிடவே
சாந்த மொளி ரமைதி — உடன்
    தானெவையும் வென்றிடுமென
மீந்தொவ்வோ ரங்கமுந்தான்—மிக
    மின்னியசை நன்னய மென்னே!

3

வெள்ளை நிலாவி னிலே—வான
வில்லின் ரசம் பிழிந்தே
தெள்ளு மமுத வீணை — செய்யும்
தெய்வச் சுவை யூட்டியே
கள்ள விழுமலரின் — நிறம்
காட்சி நறவ மெல்லாம்
மெள்ளத் ததும்பத் தெய்வ—உயிர்
மேனி யெங்கும் பாய்ச்சியதோ.

4

பேதைக் குணங்களெல்லாம்—ஒரு
பெண்ணுருவங் கொண்டதுவோ
பாத முதல் முடிவு—வரை
பண்ணமுத மூற்றிய தோ
காதல் கவிக்கண் மணி—நின்மேல்
காற்று மெதுவாய் வீசினும்
காதலீ! நின்னுடல்தான்—கன்றி
கன்னும் மெது வென்னேயடீ!

5

பூமல ரமளி யினில்—அன்னப்
பூந்தூவி தூவி யதில்
நீ மலர்ந்த முகமாய்ச்—சற்று
நித்திரை போகையிலே
சோம னுதயத் திலே — பூவால்
தொட்டெழுப்பக் கைகொணர்ந்தேன்
காம மிகுதியினல் — உடல்
கன்றுமெனப் பின்ன டைந்தேன்.

# கண்மணி ராஜம் *

சின்னஞ் சிறு குழந்தை
    சிங்காரப் பெண் சிறுமி
என் நெஞ்சு அமுதூற்றும்
    இனிமை எங்கு போனதுவோ?

பூப்போலக் கண்கள்,
    பூப்போலப் புன்சிரிப்பு,
பூப்போலக் கைவிரல்கள்,
    பூப்போலப் பாதங்கள்,

பூப்போலக் கன்னம்,
    புது மின் போல் வளையும் உடல்,
பார்ப்போர் செவிக்குத் தேன்
    பாய்ச்சும் குதலை மொழி,

மாம் பழத்தின் மேனி,
    மதி உறிஞ்சும் வட்ட முகம்,
பூம் பருத்தி ஆடை
    புனையாத தோகை மயில்,

ஆசை எலாம் ஓர் உருவாய்,
    ஆர்வம் எலாம் ஓர் கனியாய்,
பேசரிய காதல் பிழம்போர்
    மதுக் கடலாய்,

* கவி, தம் குழந்தை இறந்தபோது பாடியது.

சோதி உயிர் பாய்ந்து
துள்ளும் சிறிய உடல்
மோதும் இன்பமாய் வளர்ந்த
மோகச் சிறு குழந்தை.

காளியம்மை எம் மேல்
கருணை கொண்டு சின்னாட்கள்
தோளில் விளையாட விட்ட
சுவை ஊறும் பொன் பாவை.

வானத்து ஒரு சுடர்தான்
வையத்தைப் பார்ப்பதற்கு
மீனத் திரள் வடித்த
மின் அரசி போல் வந்தாள்.

வேலை தரும் தெள் அமுதம்
வெறுப்பாக்கும் எம் காதல்
வேலை தரும் தெள் அமுதாய்
விளைந்ததொரு தேன் கும்பம்.

பம்பு மலைக் காட்டில்
பாயாமல் என் மனைவி
கும்ப முலைக் காட்டில்
குதித்திட்ட மான்குட்டி.

தெள்ளத் தெளிக்கும்
திரை முத்தம் அல்ல எங்கள்
உள்ளக் கடலூறும்
உவகைத் தேன் முத்தாரம்.

மண்ணிட்டு மூடியதால்
மக்கிட்டுப் போகாமல்
எண்ணிட்ட நெஞ்சத்து
எழிலிட்ட வைர மணி.

வானத்து மேகத்
திரையூடு வாராது எம்
மோனத்துக் காதல்
முகிலூடு வந்த மதி.

காட்டு மரப் பொந்துக்
கருங்குயிலி அல்ல எங்கள்
பாட்டு நெஞ்சப் பொந்தில்
பாட்டிசைத்த பொன் குயிலி.

கள் அவிழுங் கமலத்துக்
கருவண்டு அல்லாமல் எங்கள்
உள்ளக் கமலத்தே
ஒளித்திருந்த பொன் வண்டு.

பேரழகும் பேரறிவும்
பேரருளும் மணம் வீசி
ஆர விரிவதற்காய்
அமைந்ததொரு மல்லி மொட்டு.

தேடக் கிடைக்காத
திரட்டுப்பால், தேவர்க்கும்
கூடக் கிடைக்காத
கூத்திட்ட பூச்செண்டு.

கண்ணோடு பாவைக்
கருத்தோடும் ஆசை எல்லாம்
பண்ணோடு வந்த தொரு
பச்சைப் பசுங் கிள்ளை.

தேசம் எலாம் சுற்றும்
சிறு பறவை சின்னேரம்
வீசும் கிளை ஒன்றில்
வீற்றிருந்து போவது போல்,

கனவினிலே கண்ட கனகம் போல்,
கள் உண்டோன்
நினைவினிலே தோன்றும்
நிச்சயம் போல், தோட்டத்தில்;

காலையிலே கண் விழித்துக்
கடும் புயலில் அகப்பட்டு
மாலையிலே வாடி
வதங்கியதோர் மலரைப் போல்,

ஆண்டு இரண்டு கூட
நிறையாத ஆயுளுடன்
மாண்டுவிட்டாள் என்னுடைய
மன் உயிராம் பெண் பாவை.

கண் கொடுத்துக் கண் பிடுங்கக்
கடவுளுக்குக் கண்ணிலையோ?
பெண் கொடுத்துப் பெண் பிடுங்கப்
பிழை என்ன செய்தேனோ?

நானிருக்க, நானிலத்தில்
நடுங்கித் தளர்வெய்திக்
கூனல் கிழவர்களும்
கிழவியரும் கூடி நிற்க,

அசட்டு விழியுடையார்
ஆபாசப் பேயுடலார்,
கசட்டு நெஞ்சப் போக்கிலிகள்
கணக்கற்ருேர் தாமிருக்க,

சின்னஞ் சிறு வயதுச்
சிறு பாவை என் மகளைக்
கல் நெஞ்சக் காலன்
களவு கொண்டான், ஐயையோ!

ஆழ விழியின் அலையெறியும்
பார்வைதனைப்
பீழையுடைய பிண நோக்காய்ச்
செய்துவிட்டான்!

கண்ணுள் மணியே!
கற்பகமே! கனிப்பிஞ்சே!
எண்ணத்து இனித்த
எழில் மதுவே! போயினையே!

இவ்வளவு பேரழகை
இப்பூமி தாளாதென்று
அவ்வளவும் தேவர்
அடைந்தனரோ? யாதறிவோம்?

ராஜேச்வரி என நான்
நாமமிட்டதைக் கண்டு
ராஜேச்வரி உனைத் தன்
நாட்டிற்கு அழைத்தனளோ?

பேரத்தி வேண்டும் எனப்
பிதிர்ப் பாட்டன் கூவினனோ?
ஆரத்தி யிட்டுன்னை
அமரர்களும் ஏற்றனரோ?

நீயாகச் சென்றனையோ?
நினைத் தேவர் கூவினரோ?
பேயான போர் ஏமன்
பிணித் தழைத்துப் போனனோ?

யாதும் அறியோம் -
ஆனாலும் எம்முடைய
காதல் மேல் ஆணை -
கவினிழந்து வாடுகின்றோம்!

எங்களையும் அவ்விடத்துக்கு
ஏன் கூட்டிப் போகவில்லை?
இங்கிவ் உலகமெலாம்
இருளாகப் போச்சுதடீ!

கோடி கோடியாப் பொன்
கொடுத்தாலும் உன்னுடைய
மோடிச் சிறு குறும்பு
மோகம் கிடைத்திடுமோ?

புருவத்தில் பொட்டிட்டு,
புது விழிக்கு மையெழுதி,
கருவம் அடைந்ததெல்லாம்
கண்மூடிப் போச்சுதடீ!

உச்சி வழித்து உன் கன்ன
உப்பலுக்குச் சாந்து வைத்து
மெச்சிப் புகழ்ந்த தெல்லாம்
வீணாகப் போச்சுதடீ!

புத்தம் புதிய உயிர்
போந்து உந்தன் கண்களிலே
தத்தி விளையாடியதைத்
தான் மறத்தல் சாத்தியமோ?

அன்றலர்ந்த செந்தாமரைத்
திகழ்ச்சி ஆர்ந்த முகம்
இன்றலர்ந்து என் நெஞ்சகத்தில்
இன்பம் பொழியாதோ?

தொட்டில் உதைத்துத்
துள்ளுவதும், நின் மலர்க் கால்
கட்டை விரல் சுவைத்துக்
கனிவதுவும் காண்போமோ?

தேனிட்டுக் குதப்பித்
தெள் அமுதம் வாய்விட்டுக்
கூனிட்ட வீணைக்
குதலை இனிக் கேட்போமோ?

காப்பிட்டோம் கையில்,
    கடகமிட்டோம் காலுக்கு,
பூப்பட்டு உடல் படுக்கப்
    புனைபட்டு மெத்தை யிட்டோம்.

கூப்பிட்ட போதெல்லாம்
    குறுகித் தவழ்ந்திடுவாய்,
கூப்பிட்டோம்: உந்தன்
    குளிர்ந்த முகம் காட்டாயோ?

"அப்பன் இவன் ஏழை,
    அரைக் காசுக் கஞ்சியில்லை,
இப்பரிசு வேண்டாம்!'
    எனத் துறந்து போயினையோ?

ஆசையெலாம் திரட்டி
    ஆருயிரை வார்த்தாற் போல்
நேசமொடு பெற்றாள்
    நினை மறந்து போவாளோ?

'ராரா ராமைய' வென
    ரமணீயக் கைவிரித்துத்
தாரா தாராவென நீ
    சாற்றுவதும் கேட்போமோ?

'அப்பா! அப்பா!' என்றும்,
    'அம்மா! அம்மா!' என்றும்,
இப்பாரில் எம்மை இனி
    யாரழைக்கப் போகின்றார்?

பட்டிட்டுப் பொட்டிட்டுப்
பள்ளிக்கு உனை அனுப்பத்
திட்டமிட்ட தெல்லாம்
திசை மாறிப் போச்சுதடீ.

காட்டாதன வெல்லாம்
காட்டி எம்மைப் பிரிந்தாய்
மீட்டும் எங்கள் வீட்டினிலே
விளையாட வாராயோ?

# கண்ணன் - ராதை

## யமுனைக் கரை

1

மாலையிலே பகல் மகளின் மையல் விழி மூடும்
மாயத்திலே சோலை யெல்லாம் சாய முற்றங்
[காடும்
மேலையிலே கதிர் மறையச் செக்கரொளி கூடும்
மேன்மையிலே மேகமெலாம் பொன் பாலம்
[போடும்.

2

கொக்குகளும் நாரைகளும் கூடுகளைத் தேடும்
கோட்டானும் வௌவாலும் கும்மிருட்டை
[நாடும்
திக்கு மயங் கிடு நேரம் தென்னல் விளையாடும்
தென்னலிலே தேனிசையும் பூமணமும் கூடும்.

3

நீண்ட நிழற் கர நீட்டி மரங்களெதிர் பார்க்கும்
நீநிலவைக் குயிலிசையிற் கூவி வரவேற்கும்
துண்டு யணித் தோகை மயில் சொக்கி நடமாடும்
தூய வெள்ளை யல்லி முல்லை மல்லி நகைத்தாடும்.

4

வண்ணமலர்க் கிண்ணியிதழ்க் கண்ணுறங்க
[மூடும்
வண்டு மது உண்டு மதி மண்டியிலே திண்டாடும்
விண்ணிடையே மீனினங்கள் துள்ளுமென நாடும்
மீனினங்கள் போலுலகில் மின் மினி கொண்
[டாடும்.

5

செவ்வொளியைக் கன்னியிருள் வெளிவரும்
[நேரம்
சிற்றெறும்புச் சாரைகளும் முற்றி விடுங்காலம்
கொவ்வையிதழ்க் கோவியரும் கோவலரும் கூடி
குரவையிட்டுக் கண்ணனையே வரவழைக்கும்
[வேளை.

6

காலுதைத்தூத் தூள்கிளப்பிக் கண்ட மணி
[பம்ப
வால் விசைத்து மேல் முறுக்கி வந்த பசு மந்தை
பால் சுரக்கக் கன்று துள்ளிப் பாய்ந்து வரும்
[காலம்
பண்ணவனுங் கண்ணன் குழல் பாய்ந்துவரும்
[காலம்.

ii

## நிலவுக்கு முன்—ராதே ராதே

1

பிஞ்சு மதி கூட இல்லை - ராதே ராதே - இந்தப்
பேயிருட்டில் நீ தனியாய் ராதே ராதே
அஞ்சியஞ்சியக்கம் பக்கம் ராதே ராதே -
[ பார்த்து
யாரை நீ தேடுகின்றாய் ராதே ராதே

2

ஊரடங்கிப் போச்சுதடி ராதே ராதே - இந்த
உலகமுறங்குதடி ராதே ராதே
காருங்கனிந்ததடி ராதே ராதே - யமுனைக்
கரையுமிருண்டதடி ராதே ராதே

3

கண்ணனையோ தேடுகின்றாய் ராதே ராதே.
கள்ளத்தனமாகவே ராதே ராதே - நீ
கள்ளம் வெளிப் பட்டு விடும் ராதே ராதே -
[ இந்தக்
கன்னங்கருக்கிருட்டில் ராதே ராதே

4

மின்னற் கொடியடி நீ ராதே ராதே - வான
வில்லின் விளக்கமடி ராதே ராதே
மின்னற் கொடி யிருளில் ராதே ராதே - வந்தால்
மேதினிக்குத் தெரியாதோ ராதே ராதே

5

பால் நிலவுத் தேன் குளித்த ராதே ராதே -

[அந்தப்

பால் நிலவைப் போன்றமுக ராதே ராதே
பால் நிலவுந் தோற்றுவிட ராதே ராதே -

[பொன்

பழுத்த நிலவடி நீ ராதே ராதே.

6

நீலக் கருக்கலிலே ராதே ராதே - எங்கும்
நீண்டிருக்குங் காரிருளில் ராதே ராதே
கோலமதி போலவே நீ ராதே ராதே - வந்தால்
குட்டு வெளிப் பட்டு விடும் ராதே ராதே.

7

காலையுதயமலர் ராதே ராதே - ஒளிக்
கமலத்துச் செந்திரு நீ ராதே ராதே
கோலக் கமலக் கண்ணன் மீதிலாசையால் -

[இந்தக்

கும்மிருட்டில் வரலாமோ ராதே ராதே.

8

கன்னங்கருக்கிருட்டு மேனியுடையான் - மிகக்
கன்னங்கருஞ்சிறுக்கண் காதலன் கண்ணன்
கன்னங்கருக்கிருட்டில் மறைந்திருப்பான் -

[பின்னர்

காண்பதெப்படியடி ராதே ராதே.

9

நிழலில் நிழலினையே தேடுவாருண்டோ - வீணாய்
நீணிரவிற் காரிருளை நாடுவாருண்டோ.
குழகனழகன் நந்த கோபன் குமரன் - அவனைக்
கூட ஒளி வேண்டுமடீ ராதே ராதே.

10

சின்னஞ் சிறு பொழுது காத்திருந்தால் - ஒளி
இன்ப மதி நிலவும் பூத்திடுமே
துன்னுமிக்க காரிருள் நீங்கிய பின் - நான்
சொல்லியனுப்புகிறேன் ராதே ராதே.

iii

## நிலவுக்குப் பின்—ராதே ராதே

1

வெளிச்சத்தாலே வான மெல்லாம் ராதே ராதே - யாரோ
பளிச்சின்னு மொழுகி வச்சா ராதே ராதே
தெளிச்சி விட்டார் முத்துக்களெ ராதே ராதே - [அதோ
சிரிக்குதடி கோடி மலர் ராதே ராதே.

2

நிலவு நல்லாக் காயுதடி ராதே ராதே - யமுனை
நீரிலலே மேயுதடி ராதே ராதே
கல வியிலே கூடுதடி ராதே ராதே - இந்தக்
காசினியும் வானகமும் ராதே ராதே.

3

அல்லி மலர்ப் பெண்ணரசி ராதே ராதே - காதல்
அம்புலியைக் கண்டு விட்டாள் ராதே ராதே
மெல்ல யிதழ்ச் சேலைகளை ராதே ராதே - அதோ
விரித்து மினுக்குகிறாள் ராதே ராதே.

4

மின்மினி விளக்கேற்றி ராதே ராதே - மல்லி
மெல்லியளும் தன் மனையில் ராதே ராதே
கண்மணியாம் வண்டு வர ராதே ராதே - அதோ
காத்திருக்காள் காணலையோ ராதே ராதே.

5

பால் குளித்த பொன் மதி நீ ராதே ராதே - அது
பணி குளித்த வெண்மதியாம் ராதே ராதே.
மால் குளித்த பூரணம் நீ ராதே ராதே - அது
மறையுங் குறையுமடி ராதே ராதே.

6

வெள்ளை நிலா ஒளியை ராதே ராதே - உன்
மேனியொளி மிஞ்சுதடீ ராதே ராதே
கொள்ளை நிலா ஒளியிற் கண்ணன் கருமைச் -
[சுடர்க்
கோலம் விளங்குமடீ ராதே ராதே.

7

வெள்ளலையின் துள்ளலிலே ராதே ராதே -
[மொகுள்
வெடிக்கும் நுரையினிலே ராதே ராதே
துள்ளு சுடர்க் கொள்ளையிலே ராதே ராதே -
[கண்ணன்
தோகையுன்னைத் தேடுகிறான் ராதே ராதே.

8

அலையலையா நுரை மலரை ராதே ராதே -
[யமுனை
அள்ளியள்ளி வீசுதடி ராதே ராதே
கலை கலைய நிலை குலைய ராதே ராதே - நீ
கண்ணனைக் கலந்திடுவாய் ராதே ராதே.

IV

## ராதையும் - கண்ணனும்

கொங்கலரும் தென்னலிலே கண்ணு கண்ணு -
[ எந்தன்
அங்க மெல்லாம் துள்ளுதடா கண்ணு கண்ணு
[ உந்தன்
கொஞ்சிமிடை மிஞ்சுதடா கண்ணு கண்ணு
ஆசை வளருதடா கண்ணு கண்ணு. [ உந்தன்

தங்க நிறத் தங்கமில்லை ராதே ராதே - அங்கு
தவழுமிடை தானுமில்லை ராதே ராதே
பொங்கி வரும் பேரின்பம் ராதே ராதே -
பொய்யின்ப மில்லையடி ராதே ராதே. [ காமப்

பேரின்பம் சிற்றின்பம் கண்ணு கண்ணு - இந்தப்
பேதம் தெரியவில்லை கண்ணு கண்ணு
ஓரின்பம் உடலின்பம் கண்ணு கண்ணு - நினைந்
துள்ள முருகுதடா கண்ணு கண்ணு.

ஒளிச்சிருக்குமுந்த னுள்ளம் ராதே ராதே - கரை
ஓடைப் பெடுத்துருகிவிட்டால் ராதே ராதே.
களிச் சிறுக்கியுடலுமில்லை உயிருமில்லையே -
காதலிலே கங்கு கரையாதுமில்லையே. [ கண்ணன்

கண்ணிரண்டும் சோருதடா கண்ணு கண்ணு -
காலிரண்டும் நோகுதடா கண்ணு கண்ணு [ என்
எண்ணியெண்ணி யேங்குகிறேன் கண்ணு கண்ணு
[ - என்னை
என்றணைக்கப் போகிறுயோ கண்ணு கண்ணு

கண்ணில்லாக் காட்சியடி ராதே ராதே - அது
காலில்லாக் கூத்தடியோ ராதே ராதே
எண்ணில்லா எண்ணமடி ராதே ராதே -
[ கண்ணன்
இணைந்து கலந்த சுகம் ராதே ராதே.



## உமர் கயாம் அருளிய

# ருபயாத்

தங்கமயக் கீழ்த் திசையின்
    தண் கவிதை நல்லொளியாம்
பொங்கு சுடர்ப் பரிதி யொக்கும்
    புத்துலகம் படைத்தது யார்?
உங்கள் உமார்* எனும் பெரிய
    உலகாயதன் படைத்தான்.

—டெனிஸன்

* உமர் கயாம்

# ருபயாத்

*1*

*கவ்வும் இருள் காவினின்றும்*
*கண் சிமிட்டும் தாரகைகள்*
*செவ்வி சிதறவிட்ட*
*செங்கதிரோன் வானத்தில்*
*கூடும் இரவினையும்*
*கூடத் துரத்தி சுல்தான்*
*மாடத்தை மின் வாளால்*
*மாட்டினன்! விழித்தெழுநீ!*

*2*

*மங்கி இருள் புலரும்*
*மசக்காலை கழிவதன் முன்*
*பொங்கு மது மாடத்துப்*
*புதுக் குரலின் கனைக் கேட்டேன்:*
*வாய்ந்த மதுக் கோயிலுள்ளே*
*வகுத்திருக்கப் பாழ் வெளியில்*
*ஓய்ந்து தலை கவிழ்ந்தே*
*உறங்குவ போல் த்யானம் என்னே?*

3

கோழிதான் கூவிடவும்,
குலவி மது மண்டப முன்
வாழி இருந்தவர்கள்,
'வாயில் திறவும்' என்றார்.
எவ்வளவு சின்னேரம்
இருப்பதென நீர் அறிவீர் ;
இவ்வளவே, போனேமேல்
இனித் திரும்பல் நிச்சயமோ?

4

புத்தாண்டு பழங் காதல்
புதுக் காதல் ஆக்கியதே ;
சித்தான மதிக் கலைஞன்
சேர்ந்தே தனியிடத்தில்,
மூசாவின் வெண் கை [1]
முடைப் புதரை மூடுவதும்,
ஏசு உடலொடும் வான்
எழும்புவதும் [2] பயின்றிடுவான்.

5

இன்ப ரோஜா மலர்களுடன்
இராம் [3] ஒழிந்து போனான் காண்!
அன்பு ஜம்ஷெட் [4] எழு வளைய
அருங் கோப்பை [5] யார் கண்டார்?
என்றாலும், திராட்சை
இளங் கொடியில் செம்மணிதான்
குன்றாது நீர்க் கரையில்
குளிர் காவின் வீச்சு கண்டாய்.

---

எண்களால் குறிப்பிட்ட விஷயங்களுக்கு அநுபந்தம் காண்க.

6

தாஊதின் [6] வாயடைத்தது,
ஆனாலும் தனிச் சுவையாய்
மேவும் இராப் பறவை
விரி ரோஜாப் பூவினிடம்,
'கள்ளே, நற் கள்ளே, நற்
கள்ளே, சிவந்த கள்ளே,
கள்ளே!' எனக் கன்னம்
கனிவூரக் கூவிடுமால்.

7

வாடீ, என் கிண்ணம்
வழிய மது வார்த்திடுவாய்!
நீடொளியின் வான் வசந்த
நெருப்பிசையில் உன் கவலை
கடுக்கும் குளிருடையைக்
கழற்றியெறி! காலப் புள்
விடுக்கும் ஒரு கணத்துள்ளே
வியன் சிறகும் விரித்ததுவே.

8

நைசாப்பூர் [7] என்றாலென்?
நற் பாபிலோன் [8] எனிலென்?
உய்கோப்பை உவட்டிடிலென்?
உவட்டாமல் இனித்தாலென்?
வாழ்க்கை மது துளித் துளியாய்
வடிந்து கழிவது காண்;
வாழ்க்கை இலை ஒவ்வொன்றாய்
வீழ்ந்து மடிவது காண்!

## 9

அதிகாலை ஒவ்வொன்றும்
ஆயிரமாப் பூக் கொணரும்
இது காண் நெறி என்றாய் :
நேற்றை மலர் எங்கு, சொலாய்!?
மலர் கொணரும் முதல் மாத
வசந்தமே மன்னு புகழ்
குலவு ஜம்ஷெட், கைக்பாட்டைக்[9]
கொண்டுசெலல் காணுயோ?

## 10

நன்றே கொண்டு செல்க
நமக்காக வேண்டியதென்?
பொன்றாப் பெருங் கைக்பாடால்
புகழ் கொசுரால்[10] ஆவதென்ன?
ரூஸ்தமுடன்[11] ஸாலும்[12]
ருத்ரநடம் புரியட்டும்,
ஆஸ்தி ஹதீம்[13] விருந்தழைப்பும்,
யாருக்கு இவை வேண்டும்?

## 11

வயலுக்கும் பாலை
வனத்திற்கும் இடையினிலே
இயன்றிருக்கும் பூங்காவின்
இனிமைக்கு என்னுடன் வாடீ!
அரசன் அடிமை என்ற
நினைவெல்லாம் அங்கில்லை ;
பரசு மாமூத்[14] பொன்பீடப்
படர் சாந்தம் ஆக்கிடு நீ!



'அதிகாலை ஒவ்வொன்றும் ஆயிரமாப் பூக் கொணரும்'

## 12

மாதவிப் பூங் கொடி நிழலில்
    மணிக் கவிதை நூலொன்றும்,
தீதறு செந் தேன் மதுவும்,
    தீங்கனியும் - பக்கத்தில்
காதலி நீ பாட்டிசைத்துக்
    கனிவோடு கூடுவையேல் -
ஏதும் இனிக் கவலை யில்லை ;
    இதுவன்றோ பரமபதம்!

## 13

பேருலகில் புகழ் தேடிப்
    பிணங்குகின்றார் சிற்சிலரே ;
சீர்தேவர் தூதரின் வான்
    சிறப்பை எதிர் பார்ப்பர் சிலர் ;
இருப்பதனை விட்டு விட்டுப்
    பறப்பதனுக்கு ஏமாறேல்!
பொறுப்பற்று எங்கோ புதைந்த
    சாப்பறையும் கேளேல் நீ!

## 14

சுற்றி நடம் புரியும்
    சுடர் ரோஜா கூறுதல் காண் ;
'குற்றமிலாச் சிரிப்போடு இக்
    குவலயத்தே பிறந்தேன் ; என்
பட்டிதழின் மூடு மொட்டுப்
    பெட்டி திறந்து உள்ளவெலாம்
கொட்டினேன் மணம் வீசக்
    குளிர்காவில் முழுவதுமே.'

## 15

பொன்னை விளைத்துப்
புதைப்போரும், மழைத் துளி போல்
பொன்னைப் பெருங் காற்றில்
பறக்கவிட்டுப் போவோரும்,
என்ன பயன் கண்டார்?
இறந்தார் பின் மண் புதைந்தார் :
பொன்னேனும் பேர்த் தெடுப்பர்
பொன் புகழும் பெற்றிலரே.

## 16

காணும் கன வெல்லாம்
கரியாகப் போகு மன்றிப்
பேணிப் பெருமை தரும்
பெருங் கனவும் எல்லாமும்
பாலை வனந்தரத்துப்
பணி ஒளி போல் சின்னேரம்
கோலம் விளக்கிப் பின்
குமைவது காண் - காணேமே!

## 17

காரிரவும் பகலும்
கதவாகக் கொண்டு வளர்
பாரகமாம் சத்திரத்துப்
படரும் புழுதியிலே,
சுல்தான் பின் சுல்தானாய்த்
தோன்றிச் சிலகாலம்
இத் தாரணி ஆண்டார்,
இறந்தார் தம் - வழிச் சென்றார்.

## 18

ஆழ் குடியால் பெரும் புகழால்
ஆர்ந்த ஜம்ஷெட் நீதிசபை[4]
பாழ்வெளியாய்ச் சிங்கமொடு
பல்லிகளும் பற்றினவாம்;
கல்லிக் கடுங் கழுதை
காலுதை தன் தலை தைத்தும்
வில்லின் திறல் வேடன்
பஹ்ரம்[15] இன்னும் விழித்திலனே!

## 19

மண்ணிடத்து மக்கியதோர்
மன்னர் பிரான் ஸீஸர்[16] உடல்
புண்ணிடத்துச் செங் குருதி
பூப்பதுவோ ரோஜாவாய்,
கவின் முகத்துக் காரிகையார்
கண் அமுதம் கானகத்தில்
குவிந்ததுவோ கருங் குவளைக்
குவியலாய் என நினைப்பேன்.

## 20

கவ்வு மதுக் காலுற்றின்
கரையோரம் கவிந்து வளர்
செவ்வி தரும் பேரின்பத்
திராட்சை இளங் கொடிதான்
வவ்விய பேர் எழிற் கொவ்வை
வாய்ச்சியர் தம் வாயமுதச்
செவ்விதனில் வளர்ந்ததுவோ?
சிதையேல், நீ சிதையேலே!



'உள்ளுண்ட மரணம் எனும் உறக்கத்தே ஓய்ந்தனர் காண்.'

## 21

நீடிய தோர் பழங் கவலை
வரு பயங்கள் நினைவழிய
வாடீ, என் கண்மணியே!
வழிய மது வார்த்திடுவாய்!
நாளையோ?— நாளை எனில்,
நாளையில் நான் நேற்றெடு சேர்
வேளையோடு ஏழாயிரமாம்
வீணுண்டோடு உறைவனன்றே?

## 22

மிக்க பேர் எழிலுடையார்
விரி நேசர் யாவருமே
தொக்க பெருங் காலன்
சூட்சி அறுவடையில்
கள்ளுண்டு ஓரிரு முறைகள்
களித்திருந்தார்; பின்னர் மண்ணில்
உள்ளுண்ட மரணம் எனும்
உறக்கத்தே ஓய்ந்தனர் காண்.

## 23

செத்திறந்தார் அன்றின்
சிற்றறையில் யாம் மகிழ்வோம்;
புத்துடையினுல் வசந்தப்
புனை காலப் புகழ்ச்சியிலே
பூமியின் கீழ்ப் படுக்கை
புகுவோமேல், யார்க்காகப்
பூமியின் கீழ்ப் பீடுக்கை
புனைவதற்கோ? யார் அறிவார்?

## 24

மண்ணோடு மண்ணாகி,
மண்ணடியில் மக்கிப்போய்,
பண்இசையும், பாடகனும்,
பனி மதுவும், எல்லாமும்
முடிந்துவிடும் : நாமும்
முடியு முன்னே உள்ள தெல்லாம்
கடிதிலே செலவு செய்து
களித்திடுவோம் வாராய் நீ!

## 25

இற்றை நாள் இன்பத்திற்கு
இயைவதனை வகுப்போர்க்கும்,
மற்றை நாள் சுகம் என்றே
வருமென்று காப்போர்க்கும்,
காரிருட்டுக் கோபுரத்தின்
காவலோன் கூறுதல் காண் :
'பேரிருளீர்! இங்கு மில்லை,
அங்கு மில்லை பெரும் பேறே!'

## 26

இம்மையிலும் அம்மையிலும்
இயைவதனை இசைத்திடுவார்
செம்மையராம் முனிவ ரெலாம்
சிறு தேவத் தூதரைப் போல்
தள்ளுண்டார் இழிவுக்கே;
தகையுண்டது அவர் வார்த்தை;
உள்ளுண்ட மண்ணகத்தே
வாய் புதைந்தார், ஓய்ந்திட்டார்,



'காரிருட்டுக் கோபுரத்தின் காவலோன் கூறுதல் காண்.'

27

சிறு வயதில் ஆர்வமொடு
தேர்ந்த பல ஞானியராம்
அறிஞரிடம் 'அஃது' 'இஃது' என்று
அலை வாதம் பல கேட்டேன்:
அறிவதற் காய்ச் சென்ற
அவ்வாயில் வழியேதான்
வெறுமையனுய்த் திரும்ப
வெளி வந்தேன் வேறில்லை.

28

அன்னு ருடன் கூடி
அறிவு வித்தை விதைத்திட்டேன்;
என்னுடைய சொந்த
எழிற் கரத்தால் அதை வளர்த்தேன்;
திண்ணமாம் அறுவடையில்
சிக்கியது இவ்வளவே காண்
'தண்ணீர் போல் தோன்றித்
தனிக் காற்ருய்ச் செல்வம்' என்றே!

29

எங்கிருந்தோம், ஏன் பிறந்தோம்
என்றறியாது இவ்வுலகில்
பொங்கிய தோர் நீர்ப் பாய்ச்சல்
புதுமையினில் புகுந்தோம் நாம்!
எங்கு செல்வோம் என்றறியாது
ஏக வெளிச் சூறை'யென
மங்கிடுவோம், இவ்வுலக
வாயில் விட்டுப் போவோமால்!

30

நான் கேளாது இப் புவியில்
நண்ணியது எவ் இடத்திநின்றோ?
நான் கேளாது இதை விட்டு
நண்ணுவது எவ் இடத்திற்கோ?
சிந்தையில் இவ் அடாத் தன்மை
செறி கேள்வி நினை வெல்லாம்
மொந்தை மொந்தையாக் கள்ளே
முழுக்கடிக்க வேண்டுமடீ!

31

வாழுலக மையத்தின்
ஏழாம் கதவூடே
சூழ் ஒளியில் பாய்ந்தேன்,
சுடரும் சனிக் கோளப்
பீடத்து அமர்ந்தேன்,
பல சிக்கல் பிரித் தறிந்தேன்;
தேடும் மனித விதிச்
சிக்கல் மட்டும் தெளியவில்லை

32

கரைக்குப் பின் கதவுக்குக்
காணேமே சாவி ஒன்றும்:
திரைக்குப் பின் ஏதேதோ
தெரியவில்லை, பார்த்ததில்லை:
யான் என்றும் நீ என்றும்
யாதோ உரைப்போம் - பின்
யானுமில்லை, நீயுமில்லை,
யாதுமில்லை காணுயே!

## 33

காசினிக்கும் எட்டாது ;
கரு நீலம் பாய்ந்து, கத்தி
வீசும் கடலுக்கும்
விளங்காத ரகசியம் காண் :
கங்குல் பின் காலையெலாம்
மறைத்துப் பின் காட்டுகின்ற
பொங்கு குறிச் சுடர் வானும்
அறியாத போதமன்றோ!

## 34

என்னுள்ளே திரைக்குப் பின்
இருக்கின்ற பெருமானே!
துன்னிய கார் இருள் நடு ஓர்
சுடர் பிடிக்க வேண்டி யல்லோ
என் இரண்டு கை யெடுத்தேன் :
எங்கோ ஓர் ஒலி கேட்டேன் :
'உன்னிடத்தே நான் குருடன் -
உணர்ந்தனையோ?' என்றதுவே

## 35

அன்றே இக் களிமண்ணால்
ஆக்கு கிண்ணி விளிம்போரம்
நன்றே சாய்ந்து என் உயிரின்
நலம் வேண்டித் தொழுதிட்டேன் :
முத்தாடி முத்தாடி
முணுமுணுத்தே உரைத்தது :
'செத்தார் பிறப்பதில்லை
செம்மது உண்' என்பதுவே.

## 36

நடுங்குங் குரலினிலே
நல்லிசையில் தேன் கோப்பை,
'ஒடுங்கும் உயிர் ஓர் முறைதான்;
ஊறும் கள் உண்' எனவே
செப்பினதாய் நினைத்தேன்;
செவ்விதழில் முத்தங்கள்
எப்படியோ, எவ்வளவோ,
ஏற்றதுவும் கொடுத்ததுவும்!

## 37

ஏனெனில் என் நினைவினிலே
யான் ஒரு நாள் வீதிவழிப்
போனதுவும், ஓர் குயவன்
புதுக் கோப்பை புனைவதுவும்,
அஞ்சி அந்தக் கோப்பை
அழிந்தோடும் குரலினிலே,
'மிஞ்ச மெல்ல மெல்ல' எனக்
கெஞ்சுவதும் தோன்றுதல் காண்.

## 38

பண்டை முதல் இன்றுவரை,
பல் பலவாம் தலைமுறைகள்
கண்டது இதைப் போல் ஓர்
கதையன்றோ? பெருங் கடவுள்
குழைத்த களி மண்ணாலே
குழந்தைகளாய்ப் பல உருவாய்
பிழைக்க விட்டான் என்னும் ஒரு
பெருங் கதைதான் காணையோ?

## 39

பூமியிலே சொட்டுகின்ற
புதுத் தேன் துளி பலவும்
பூமி உணும் என்று சொலல்
பொருந்தாது ; பூமியின் கீழ்
ஆழத்தில் பல காலம்
அடங்கிப் புதைந்த விழிக்
கோளத்தின் சினம் அகற்றி,
குலவும் இன்பம் கொடுக்குமன்றே.

## 40

செந்தாமரைச் சேற்றின்
சேக்கை விட்டு மேலெழும்பி
நந்தாது சூரியனின்
நல்லொளியாம் கள் உணல் போல்
வான வெள்ளம் வைய வெள்ளம்
மாறிக் கவிழ்க்கும் வரை
தேன் அமுதம் தேக்கெறிந்து
தெவிட்டாது வாழ்ந்திடு நீ.

## 41

தெய்வீக மனுஷீகச்
சிக்கலினில் சிக்காதே!
பெய்நாளைப் பிணக்கெல்லாம்
பெருங்காற்றில் சூறைவிட்டு
ஏந்து மணித் திராக்ஷை
இளங்கொடித் தேன் பசுந்தளிரின்
கூந்தலினை மெல் விரலால்
கோமளமாய் வருடுவை நீ.

## 42

தெள்ளு மதுக் கள்ளும்,
முத்தமிடும் தேன் இதழும்,
துள்ளு மற்றைப் பொருள் போலத்
தோன்றிப் பின் அழிவதெனில்,
நேற்றுவரை இருந்தபடி
இன்றிருக்கும் நீர்மையினுல்
ஊற்று மதுப் போதையிலே
ஒரு நாளும் குறையோமே.

## 43

ஆதலினுல் ஆற்ருேரம்
ஆரிருள் கள் தேவதைதான்
மோதும் இன்ப மதுக் கிண்ணி
மோகனத்துக்கு அழைப்பானேல்,
உயிரே நாக்காக
ஒரு கணத்தே உறிஞ்சிடுவாய்!
அயரேல், கடை நாள்தான்
ஆயினும் என்? அயரேலே!

## 44

ஜீவன் இந்த மண் உடையின்
சிறுமை விட்டு வானகத்துக்
காவினிலே நிர்மலமாய்க்
காற்றின் மேல் பாயாமல்
குட்டக் களி மண்ணும்
குடிசை யுடலில் குறுகி
வெட்டியாய் வாழ்வதெனல்
வெட்க மன்ருே? வெட்க மன்ருே?

## 45

கூற்றுவனூர்க்கு ஏகும் வழி,
குமையும் உயிர் ஓர் பகலில்
ஆற்றியிருந்து இளைப்பாற
அமைந்தது உடல் கூடாரம்:
ஜீவன் கிளம்பிடவும்
செங்காலன் சாடிடுவான்,
மேவு மற்றோர் விருந்தினுக்கே
கூடாரம் விரித்திடுவான்.

## 46

நம் கணக்கைத் தீர்த்து
நமை மடித்த பின், வாழ்க்கை
நம் போலக் காணுது
என நினையேல்: நம் போன்றே
அழியாத தேன் வார்ப்போன்
ஆருயிர் வள்ளத்தி னின்றும்
பொழிந்துள்ளான் பல குமிழி
பொழிந்திடுவான் இனி மேலும்.

## 47

திரைக்குப் பின் நாம் மறைந்து
சென்ற பின்னும் இவ்வுலகம்
கரையற்று நீண்ட பெருங்
காலம் வரை வாழ்ந்திடுமாம்:
கத்துகின்ற கடல், ஒதுக்கும்
கல்லைப் பின் கருதிடுமோ?
இத்தரை, நாம் வந்ததுவும்
போனதுவும் இசைத்திடுமோ?

48

ஒன்றுமே இல்லாத
ஓர் கணமே வனந்தரத்தின்
நின்ற குளத்தூறும்
நிறை வாழ்வுச் சுவை உண்போம்.
மாயமாம் வாணிபர்கள்
வந்துவிட்டார்; புறப்பட்ட
தூய நிர் நில வெளிக்கே
துரிதத்தில் தொடர்வாயோ?

49

வாழ்க்கை எனும் சிக்கல்
வளரும் ரகசியங்கள்
நீக்கவோ முயல்கின்ருய்?
நேசனே! சீக்கிரம் காண்,
மயிரிழையே உண்மைக்கும்
பொய்மைக்கும் வரம்பெனலாம்;
உயிர் எதனைச் சார்ந்திங்கு
உறைவது, நீ அறிவாயோ?

50

மயிரிழையே உண்மைக்கும்
பொய்மைக்கும் வரம்பெனலாம்;
உயிர் அறிய 'அலீப்'[16] என்னும்
ஓரெழுத்தே போதுவதாம்;
உன்ணலே முடிவதுவோ?
உள்ளகத்தே பொக்கிஷமும்
தன்னேரில்லாத் தலைவன்
தன்னையும் நீ காண்குவையோ?

## 51

அவன் இன்ப ரகசியத் தேன்
அவனியுறு நரம்பி லெலாம்
கவின் ஊறிப் பாதரசக்
களிப் போடே பாய்ந்திடுமாம் :
புள்ளாய், விலங்காகிப்
புல் பூண்டாய் மாறிடினும்,
உள்ளே இருக்கும் அந்த
உயிரோனே - மாறுதோன்.

## 52

மருட்டும் இருள் சுருள் சுழல
வளையவரும் நாடகந்தான்,
தெருட்டும் ஒரு கணத்துள்ளே
சிந்தித்தான் : தானேதான்
நாடகமாய், நாடகத்தில்
நடிப்பவராய்ப் பார்ப்பவராய்
ஆடுவன் காண் பெருங் கடவுள்
அரும் போது போக்குதற்கே.

## 53

இடிப் பறியாப் பூமியின் கீழ்
எட்டி எட்டிப் பார்த்தாலும்,
வெடிப் பறியா வான் கதவை
வெறித்துற்று நோக்கிடினும்,
வீணே காண் ; நீ நீயாய்
விளங்கும் இன்று வரையிலுமே ;
காணுவதோ நாளை உனைக்
கழித்த பின்பு ரகசியங்கள்?

54

இதுவென்றும் அதுவென்றும்
எண்ணமிட்டுக் கலங்காதீர்!
எது பெரிதென்று எது சிறிதென்று
ஏதேதோ வாதமிடேல்!
கனி அமுதாம் திராட்சைக்
கனியூறும் செந்தேனின்
இனிமையினில் கசப்பெல்லாம்
கவலையெல்லாம் இழந்திடுவீர்.

55

இரண்டாம் கல்யாணம்
என் மனையில் யான் செய்யத்
திரண்ட எந்தன் மனத் திறனைச்
சிநேகிதர்காள், நீர் அறிவீர்!
வெட்டியாம் மலட்டறிவை
விலக்கிவிட்டுப் படுக்கையினில்
குட்டித் திராக்ஷைமணிக்
கொடிமகளைக் கைப்பிடித்தேன்.

56

உள்ளதுவும் இல்லதுவும்,
உள்ளும் புறமும் எலாம்
தெள்ளத் தெளியத்
தெரிவிப்பேன் என்றாலும்,
உள்ளத்தாலே ஒருவன்
உணரும் கலைகளிலே
கள்ளைப் போல் வேறொன்றில்
ஆழ்ந்தில்லேன், காணீரே!

## 57

தரும் எந்தன் கணிதத்தின்
செவ்வியதோர் தன்மையினுல்
வருடங்கள் வரிசை யெலாம்
பிழையின்றி வரும் என்பார் ;
சென்ற நாள் அவை கழித்துச்
சேரு நாள் அவை அழித்து
ஒன்ருக வகுக்கின்ற
வித்தையலால் ஒன்றுமிலே.

## 58

மாலே போம் போதினிலே
மதுக் கடையின் வாயில் வழிச்
சீல இருட் செறிவில்
ஒளி வீசும் தேவதை போல்
தோளின் மேல் மது வள்ளம்
தூக்கிவந்து என்னிடம் நீட்டிக்
கோளாகக் 'குடி' என்ருன்
கோற்றேனே த்ராக்ஷை மணி!

## 59

சாதி எழுபத்திரண்டு
சண்டையிடும் சமய நெறி
வாத மெலாம் கணப் போதில்
மாய்த்துடைக்க வல்லது காண் ;
சூதுற்ற காரீயச்
சுழல் வாழ்வைத் துகளில்லாப்
போதப் பொன்னுக்கும் ரச
வாத மன்ருே த்ராக்ஷை ரசம்!

60

மூச்சினிலும் தேவன் அருள்
மூண்ட திறல் மாமூதின்
வீச்சினிலே சுழல் காற்றின்
வீரவாள் முன்னிலையில்,
துக்கம், துயரம், அவ
நம்பிக்கை, தொடர் பவமாம்
மைக்கார் இருள் அசுரர்
மருண்டோடிப் போயினரால்.

61

தேவன் வளர்த்த மணித்
தேனூறும் த்ராகைக்ஷயினைப்
பாவமெனச் சொல்பவர் ஆர்?
பரமன் அருள் சுவை யன்றோ?
தீயதுவோ? இவ்வார்த்தை
தெய்வம் பொறுத்திடுமோ?
தீயதெனில், ஏன் வழியில்
தேவன் அதைத் திகழ வைத்தான்?

62

மண்ணிடத்து மாண்டு உடலம்
மக்கிய பின் தெய்வீகக்
கிண்ணிதனில் வான் மதுவின்
கிளர்ச்சி உண்போம் என நம்பி,
பின்னுள் பேரின்பம் எனும்
பேற்றிற்கு ஏமாந் திருந்து,
இந்நாள் என் உயிர்க்கமுதாம்
இன்பக் கள் இழந்திடவோ!

## 63

உண்மையில் வானுலகுகளும்
　　உறு நரகப் பயங்களுமே
உண்மையிலே ; ஓட்டமதாய்
　　ஓடுகின்ற வாழ்க்கை யொன்றே
உண்மை ; ஈதல்லாமல்,
　　உண்மை எனல் யாவும் பொய்,
உண்மையினில் பூத்திடும் பூ
　　உறங்கி உதிர்வது காண்.

## 64

அப்பால், காரிருள் கதவுக்கு
　　அப்பாலே, கணக்கற்றார்
இப்போது வரை சென்றார்
　　என்றாலும் ஆச்சரியம் :
ஒருவரேனும் திரும்பி
　　உரைத்ததிலே ; வீதிவழி
தெரியும்வகை நாமும் சாத்
　　தெருவூடே செல்வதுதான்.

## 65

சித்தர்களும் பக்தர்களும்
　　தேவ வாக்கு என்பதெலாம்
நித்திரையில் தோன்றியதோர்
　　நினைவல்லால் வேறில்லை ;
இத்தகைய பொய்க் கதைகள்
　　எல்லாம் தோழருக்கு உரைத்து,
செத்து விழும் நித்திரையில்
　　சேர்ந்துவிட்டார், காணையோ?

66

காணாத ரகசியத்தின்
காட்சியெலாம் கண்டுவரச்
சேணுரும் பெரு வெளியில்
திரிய விட்டேன் என் உயிரை ;
மெள்ள மெள்ள என் உயிரும்
மீண்டெனக்கு விடையாக,
'வெள்ளியவான் நரகமெலாம்
நான்!' எனவே விளம்பிடுமால்.

67

ஆசை எலாம் பூர்த்தி
அடைவதுவே வானாகும் ;
வீசுங் கவலை அனல்
வேகும் உயிர் நிழல் நரகம் ;
விட்டு வந்த காரிருளில்
மீண்டும் நாம் புகும்போது
பட்ட துயர் நரகும்
படர் வானும் காணாதாம்.

68

சூத்திர தாரியின் சூழ்ச்சி,
சூரியனின் ஒளி கொள்ளும்
பாத்திரமாம் சந்திரனின்
படர் நிலவில் நாமெல்லாம்
பொம்ம லாட்டத்து ஆடும்
பொம்மைகளைப் போன்றல்லோ
சும்மா வருவதுவும்
போவதுவும் சூத்திரத்தால்!

## 69

படர் இரவும் பகலும்
சதுரங்கப் பலகையதாய்க்
கடவுள் விளையாடும்
கணக்கற்ற பொம்மைகள் நாம்;
அங்கும் இங்கும் நகர்வதுவும்,
அடைப்பதுவும், வெட்டுவதும்,
இங்ஙனமே பின் மறைப்பில்
இறந்துறங்கிப் போவோமே.

## 70

பந்தது தான் அல்லவென்றும்
ஆமென்றும் பகர்வதில்லை -
பந்து உதைப்போன் உதைத்தபடி
பாய்ந்துருள்வ தல்லாமல்;
உலகம் எனும் விளையாட்டுக்
காவிடையே உமை விட்டான்
அலகில்லா இவை யாவும்
அவன் அறிவான்! — அவன் அறிவான்!

## 71

எழுதும் விதி விரல்தான்
எழுதிக் கொண்டே நகரும்;
தொழுதும், துதி செய்தும்,
சுழல் அறிவின் சூழ்ச்சியிலும்,
எழுதுவதில் பாதி வரி
என்றாலும் கலையாதே!
அழுதாலும் கண்ணீரால்
அரை வார்த்தை அழியாதே!

72

வான் வெள்ளக் கவிழ்ப்பின் கீழ்
மாந்தர் எலாம் வீணுகக்
கூனிக் குறுகிப் போய்க்
குறுநடையாய்க் குமைகின்ருர் ;
வான் நோக்கிக் கைகுவித்து
வாழ்த்தாதீர்! உதவிக்காய்
வானும் நமைப் போன்றே
வகையின்றி உருளுதல்காண்.

73

ஆதியினில் களிமண்ணல்
ஆக்கியுளான் யாவையுமே ;
ஆதியிலேயே ஊழி
அறுவடைக்காய் விதைத்துள்ளான் ;
சிருட்டியினில் முதற் பகலே
சேர் ஊழிக் கடை நாளின்
தெருட்டும் விதி முடிவைத்
தீட்டியுள்ளான், காணயோ?

74

நேற்றைத் தினம் இன்றென்
நெஞ்சூறும் வெறி வகுக்கும்
ஆற்றலுறும் நாளேக்கு
அழிவு வெற்றி யாதுறினும்,
எங்கிருந்தோம், ஏன் பிறந்தோம்,
எங்கு செல்வோம், ஏன் என்னும்
சங்கை விளங்காமையினல்
தண்அமுதக் கள் உண்போம்.

## 75

கதிரவனும் செல்லாத
　　கடைவெளியில் நின்று சுடர்க்
குதிரையின் மேல் ஏறி வரும்
　　குரு முதலா நவக்ரஹங்கள்
கதி வகுத்த முதற் பகலே
　　களிமண்ணுல் பிசைந்த உயிர்
பதியும் எந்தன் உடலகத்தே
　　பாய்ந்தது இந்த விதிர்விதிர்ப்பே.

## 76

சித்தம் அதில் திராட்சை மணித்
　　தேன் ஊறி நரம்பு எல்லாம்
தத்தி எந்தன் உயிர் மேவித்
　　தழுவுதல் காண்! துறவியர்கள்
கத்தி எனைச் சபிக்கட்டும்,
　　புறத்தினிலே, கதைக்கின்ருர் -
இத்தனைக்கும் வான் சாவி
　　இருக்கலாம் என்னிடத்தே!

## 77

ஈதறிவேன் நிச்சயமாய் :
　　ஈசனெளி, அன்புக்காய்
மோதுவதோ? அன்றி எனை
　　முடிப்பதுவோ? யாதெனினும்,
உள்ளுகின்ற கோயிலுள்ளே
　　ஒளி முழுதும் இழப்பதினும்
கள்ளுக் கடையில் வெட்டும்
　　கதிர் ஒன்றே மேலன்ருே!

78

அறிவில்லா மண்ணுடலில்
அறிவெழுப்பி, அதனாலே
நெறியில்லா நெறியின்பம்
நேர்ந்திடில், நீ, 'அழியாத
தண்டனையாம் நரகத்தில்
தள்ளுவம்' என்றே கூறும்
கண்டனைக்கு ஏதேனும்
கருத்துளதோ? நீதி இதோ?

79

கட்டிக் களிமண் உடலைக்
கடனாகக் கொடுத்துப் பதில்
கெட்டிப் பொன் நெறி என்னைக்
கேட்பதுவும் சரியாமோ?
ஒப்புக் கொள்ளாக் கடனைக்
கொடுத்திடென ஒறுத்திடுதல்
ஒப்புவதோ வ்யாபாரம்
உதவியில்லா வறியனிடம்?

80

போகின்ற பாட்டையிலே
புழை பலவும் மதுக் குடமும்
தாகமுற வைத்து, என்னைத்
தடுத்து விதிச் சூழலினால்
வேகமாய்ப் பாவ வலை
வீசிப் பிடித்த பின்னர்,
பாவி யான் என நீயே
பழித்திடுதல் நெறியாமோ?

81

மாந்த ரெலாம் கீழான
 களிமண்ணால் வகுத்தனை நீ,
சாந்தத் துறக்கத்தும்
 சர்ப்பத்தைப் புகுத்தினையே!
ஜீவர் முகம் காரடையச்
 செய்யு பவம் நினதே; நின்
பாவம் மன்னித்தோம்; எம்
 பாவமதும் மன்னிப்பாய்!

82*

போகின்ற நாளை அந்திப்
 போது எல்லாம் கூட்டின் கீழ்,
வேகின்ற பசியோடு
 விரதத்தால் மெலிந்த ரம்ஸான்
கடை நாள் கழியு முன்னே
 தனியாகக் களி மண்ணைக்
குடக் கூட்ட நடுவே நான்
 குயவன் வீட்டிடை நின்றேன்.

83

வடிவத்தில் பலபலவாய்
 வகுத்திருக்கும் மண் குடங்கள்
கடினத்துத் தரைமீதும்
 சுவர் அருகும் கலந்திருக்கும்;
பேசியதில் சில குலவும்,
 பேசுவதைக் கேட்டு, சில
யோசிக்கும் பான்மையினில்
 ஒன்றும் உரையா திருக்கும்.

*பாட்டு 82 முதல் 90 முடிய 'குஜாநாமா' என்ற மகுடத்துடன் எழுதப் பெற்றவை.



‘குடக்கூட்ட நடுவே நான்
குயவன் வீட்டிடை நின்றேன்.’

84

'வம்புக்காய் அல்ல எனை
வகை வகையாய் மண்ணெடுத்து
அம்பு* விட்டு இழைத்து, அழகாய்,
அற்புதமாய் உருச் செய்தார் :
வெம்பு மண்ணில் திரும்பவுமே
மேனி உடை படுவதற்கோ
அம்புவியில் பிறந்தது நான்?'
என்று அங்கொன்று அரற்றுதல் காண்.

85

'கொட்டி இன்ப மதுக் குடித்த
குப்பியினை உடைப்பதற்கே
துட்டப் பயலுக்கும் எண்ணம்
தோன்றிடுமோ? தன் சொந்தத்
திருக் கரத்தால் வனைந்திடு மண்
செப்பினைப் பின் கோபத்தால்
நெருக்கி உடைக்கான் - இதுவே
நிச்சயம்!' என்று ஒன்று சொலும்.

86

அத்தனையாய் மற்றவை போல்
அழகமையப் பெற்றில்லாச்
சொத்தை மட்குடம் எழுந்தே
துரிதமுடன் கூறிடுமால் :
'கூனிக் குறுகும் எனைக்
கொக்காணி காட்டிடுவார்
மேனி வகுக்குங்கால்
விரல் அசைந்ததோ என்றே?'

---

* அம்பு - நீர்.

87

ஆங்கொன்று உரைத்திடுமால்
அறிவாளன் சூபி யைப் போல் ;
பாங்கில் நெருப்பு நெஞ்சப்
பயனுறும் சிறதடிப்பாம் :
'குயவன் என்றும் குடம் என்றும்
பற்பலவாய்க் குரைக்கின்றீர் -
குயவன் ஆர்? குடம் ஆர்? இக்
கொள்கை அறிவீரோ நீர்?'

88

'சுட்டபேர்க்கு எம் உடலம்
துடிதுடிக்க நல் உருவைக்
கெட்டுத் தாக்கிய அந்தக்
கிளர்ந்த தேவனே நரகக்
குட்டமதில் உழைத் தள்ளிக்
குமைப்பன் எனச் சிலர் சொல்வார் :
'துட்டனன்று அவன், நல்லன்,
சுகம் அடைவீர்!' என்றது ஒன்றே.

89

'படைத்ததார் எனை, வாங்கிப்
பயனடைவது ஆர் எனவே
மடத்தனங்கள் இனிப் பேசேன் :
வரண்டுளது என் அகம் எல்லாம் ;
பழகிய தேன் மது வார்ப்பீர்—
பசுமையுறும் என் நெஞ்சம்,
அழகிய என் உயிர் மீளும்!'

---

என மற்றொன்று அரற்றுதல் காண்.

90

ஒன்றைவிட்டு ஒன்று இவ்வாறு
ஊறும் இன்பக் கதை பேச,
நின்ற நெடு வானத்தில்
நிலவு எட்டிப் பார்த்திடுமால் :
ஒன்றோடு ஒன்று உறவோதி
உரைப்பது காணச் சோகிரே!
இன்று இப்போது இக்கவி
தோன்றின் முடிச்சில் எழுவமே!

91

திராக்ஷை தரும் தேனில் ஊறிக்
களைநாளில் தேற்றுவிப்பீர்;
திராக்ஷை தரும் தேனில் உடல்
குளிப்பாட்டிச் சேமிப்பீர்;
திராக்ஷை இலைச் செறிவினிலே
எனை மூடித் திகழவைப்பீர்;
திராக்ஷை வளர் தோட்டத்துச்
செம் மண்ணில் புதைத்திடுவீர்!

92

புதைத்திட்ட உடற் சாம்பல்
பொடி கூடத் திராக்ஷையாய்
உதைத்திட்டு மேல் எழும்பி
ஊறு மணம் வீசிடுமேல்,
பதைத்தவர்க்கு மதுப் பழங்கள்
படிப்பிப்பீர் போலன்றி
இதத்தை எவர்க்கும் அறியாது
இறைப்பதன்றோ திராக்ஷை மணி!

## 93

ஆசையுடன் யான் வளர்த்த
அழகு உருக்களால் என்னைப்
பேசுதற்கும் இழிவாகப்
பேருலகம் எண்ணியதால்,
கீர்த்தி எலாம் மது ஊறும்
கிண்ணத்தே முழுக்கடித்தேன் ;
சீர்த்தி எலாம் கள் ஊறுஞ்
செய்யுளுக்காய் விற்றுவிட்டேன்.

## 94

'விட்டு விடுவோம் கள்ளே,
வேண்டாம்!' எனப் பலகால்
திட்டமிட்டேன் - எனினும் அப்போ
தெளிவோடு இருந்தேனோ?
வட்டமிடும் இளவேனில்
ரோஜாவின் மலரோடு
எட்டினதும் திட்டம் எலாம்
இழிந்து சிதைந்து ஒழிந்தனவே.

## 95

கள்ளே என் புகழை, எலாம்
களவு கொண்டது என்றாலும்,
கள்ளே தான் 'காபிர்' என
மதத்துள்ளோர் கதைத்திடினும்,
கள்ளைப் போல் மதிப்பரிய
காசினியில் வேறில்லை ;
வெள்ளிக் காசுக்காய்க் கள்
விற்பதுதான் ஆச்சரியம்!

## 96

இளவேனில் ரோஜாவின்
இதழோடும் குவிவதுவே!
இளமை எனும் மணம் வீசும்
ஏடுகள் தாம் மூடுதற்கே!
இளங்காவில் ராப் புள்ளின்
இன்னிசை எங்கு ஏகுவதோ!
வளங்கள் எலாம், ஐயையோ,
மாய்ந்து ஒழிந்து போவதற்கே!

## 97

அழியாத பேரூற்றின்
பாலைவனம் அரைக்கணமே
கழியாமல் சிதைந்தேனும்
காட்சியுறக் காட்டிவிடின்,
மிதியுண்ட செடி மீண்டும்
மீளுகின்ற தன்மை என,
சதியுண்ட தாகத்தால்
தவித்திடுவோன் உயிர்த்திடுவான்!

## 98

காலம் கடப்பதன் முன்,
காவலோன் விதிச் சுருளை
மேலும் விரிக்காமல்
விட்டுவிட்டால், அல்ல எனில்,
எழுதியவை அழித்துப் பின்
எழுதிடினும், அல்ல எனில்,
முழுதும் துடைத்து எல்லாம்
முடித்திடினும் நலமன்றோ!

99

காதலியே! ஈசனுடன்
கலந்தோமேல், இப்புவியில்
மோது துன்பக் கோளம் எல்லாம்
முழுவதும் கைவசப்படுத்திப்
பொட்டெனவே போட்டுடைத்துப்
புதுமையுற நெஞ்சகத்துக்கு
எட்டும் வகை இன்பத்தால்
இழைத்துப் புனைப்போமே!

100

எமைத் தேடிப் பின்னும்
எழுகின்ற வெண்ணிலவே!
எமைத் தேடி எத்தனை நாள்
குறைந்து நிறைந்து இயங்குவையோ?
எவ்வளவு முறை யாங்கள்
இறந்த பின்னும், இவ்வனத்தைக்
கவ்வி எமைத் தேடுவையோ,
கதிர் நிலவே, யாரைக் கண்டார்?

101

தாரகை சேர் காவினத்துச்
சந்திரனைப் போல் நீயும்
சேரும் இந்தப் பூங்காவின்
செவ்வி எலாம் பார்த்துவரின்,
விருந்தினர்க்காய் வான் மதுவின்
வெள்ளம் விடிப்போய், நான்
இருந்த இடத்து ஒரு கோட்டே
இன்பத் தேன் கிண்ணி கவிழ்!

தமாம் ஷுத்

# நிலா

நீல் வானக் கடலினை மேவி
நிலவுகின்ற நிலா எனும் பெண்ணே!
பால் அமுத ஒளி யெங்கு பெற்றாய்?
பாரும் விண்ணும் மயக்கிய ஜோதி
கோல மின்மினித் தாரகைக் கூட்டம்.
கோடி கோடி உனைச் சூழ்தல் என்னே!
காலை எங்கு மறைந்திடுகின்றாய்?
கண்ணற்ற சூரியனுக்குப் பயந்தோ?

உலகம் எங்கும் உறங்கிடும் காலை
உலகில் என்ன தொழில் செய வந்தாய்?
இலகு மாந்தர் கொடுமைக்கு வெட்கி
இருளிலே வந்து உலாவுகின்றாயோ?
மலைகள் மீதும், கடல்களின் மீதும்,
மற்றும் எந்தப் பொருள்களின் மீதும்
உலவுகின்றனை: உன் ஒளிக் கள்ளால்
உலகம் தூங்கிக் களிப்பது போலும்!

மந்தமாகிய நின் ஒளி யுள்ளே
மதனத் தேன் வந்து ஒழுகுது இதென்னே?
சந்த மோனத் தனிச் சுவைக் கீதம்
தண் கதிர்க்குக் கொடுத்தனை கொல்லோ?
உந்தன் ஜோதி அழகினைக் காண
உனக்கோர் நீர்நிலைக் கண்ணாடி போதும்;
எந்த நீர்நிலை உள்ளும் புகுந்தே
என்ன செய்குவை, சாற்றுதி சற்றே!

வெள்ளைத் தாமரை உந்தனைக் கண்டால்
விரிந்து பேசும் விதம் என்ன, சொல்லாய்!
புள்ளைப் போலும் இறக்கைகள் வேண்டும்,
புனிதை உன்னை அடைந்திடுவேன் நான்.
கள்ளைத் தேனுள் பொழியுகின்றாயே,
கவிதை வெள்ளம் எழுப்புகின்றாயே,
நொள்ளைப் பூமியில் இன்பம் வேருண்டோ
நுந்தன் ஜோதி அழகினை விட்டால்?

வான மேகத் திரைகளின் ஊடு
வந்து வந்து மறைந்திடுகின்றாய்,
தேனைப் பாலில் பொழியுகின்றாயே,
தெய்வக் கள்ளை உமிழுகின்றாயே,
மோனத்தே வேணு நாதத்தைச் சேர்த்தே
மோஹினீ, எமைக் கூவுவை போலும்!
வானத்தேற வகை ஒன்றும் காணேன்,
வந்தோர் முத்தம் அளித்திடு மாதே!

# மழை

## 1

வானம் என்ற வெளியினில் பற்பல
வாக மேகக் குவியல் கவிந்துமே,
வான வில்லின் வியப்புச் சுவையினில்
வான மின்மினி அம்பொன்று இயற்றியே,
ஞானப் பூமி நடுங்கிட நாண் ஒலி
நாட்டிப் பேரிடி செய்து குலுக்கியே,
மோன முத்துச் சுடர்க் குண்டு பெய்துமே
மோகச் சோதி மலர்கள் வளர்த்துமால்.

## 2

வட்ட மாகிய நீலத்தின் கூரையாம்,
வாய்ந்த சூரியச் சோதி மகிழ்வதாம்,
மட்டிலாத மதியொளி வேட்குமாம்,
மாறி மாறிச் சிமிட்டும் விண் மீன்களாம்,
பொட்டெனக் கரு மேகங்கள் மூடியே
பூமித் தேவி உடல் புளகம் பெற
இட்டமான வெள்ளாமை விளக்குமாம்,
யாவருக்கும் களிபிறந்து ஓங்கவே.

## 3

மின்னல் பாய்ந்து விழுவது போலவும்,
வெள்ளிக் கம்பிகள் வீழ்வது போலவும்,
சின்னச் சின்ன வைடூர்ய மணிகளைத்
தேவர் இங்கு பொழிவது போலவும்,
கன்னல், செந்நெல், கொடி, செடி யாவையும்
கண்ட மோனத் தவத்தருள் போலவும்,
அன்னை காளிதன் வான்க் குடையினின்று
ஆயிரம் வகைச் செல்வங்கள் நல்குவாள்.

1

# பட்டுப் பூச்சி

## கேள்வி

மின்னல் வரிப் பொன் தகட்டில்
மேவு பல வண்ண
வெட்டு மணிப் பட்டுடையின்
விசிறியின் மேல் மிதந்தே,
புன்னகை செய பூங்காவின்
வளையவரும் பொன்னே!
புகழ் மது உண்டுஅக மகிழ்ந்த
புதுச் சோதிப் பாவாய்!
சின்னஞ் சிறு முட்டைப் புழுவாய்
முசுட்டையிலே கறித்த
சிறு போதின் ஆசை எல்லாம்
செப்பிடுவாய் எனக்கே!
என்னென்ன கனவு கண்டாய்?
ஏதேது நினைத்தாய்?
இவ் உலகின் செல்வம் எல்லாம்
எவ்வண்ணம் பெற்றாய்?

2

பழுத்த சுவர் முட்டையுள்ளே
கண்வளர்ந்த போது,
பாரகமும் விண்ணகமும்
மறைந்த இருள் நேரம்,
செழித்த பட்டுப் பஞ்சணையில்
சிறையிருந்த வேளை,
சிந்தையுற்ற கனவு எலாம்
எந்தனுக்கிங்கு உரையாய்!

விழித்த மலர் கொழித் தழகு
வெளிப்படற்கு முன்பே
விஞ்சை என்ன செய்து இந்த
மிஞ்சும் எழில் பெற்றாய்?
கழித்த உடைக்குள் இந்தக்
கவின் உடையை ஈசன்
கட்டிவைத்தான் போலும் சிறு
பெட்டியிலே முன்னால்!

மதில்

காம்பின்றித் தன்னிலே தான்
கவின் விரியும் மலர் போல்,
களிப்பற்ற பச்சை உடைக்
கருக்கிருட்டு முட்டை
பாம்புரிக்குஞ் சட்டை எனப்
புறத் தழகை நீக்கி
பரம ரகசிய மகத்துப்
பான்மை எலாம் விரித்தேன்!
கூம்பும் இருள் சுடராச்சுக்
குற்றுயிரில் இன்பம்
குதித்த துருள் சூரியனின்
கொதிக்கும் அழல் தேனைத்
தேம் பொதிந்த வண்ண மலர்க்
கிண்ணி எலாம் சேர்த்துத்
தேசுடன் தம் வாசல் திறந்து
ஆசை வளர்த்திற்றே!

4

வானொளியும் மண்ணொளியும்
மலர் ஒளியும் மந்த
மாருதத்தின் இன்னிசையும்
ஆரமுதச் சந்தக்
கானகத்துப் புள்ளினங்கள்
கவின் நிறைந்த பாட்டும்,
காலம் எலாம் பெற்றுவக்கும்
சீலம் நனி பெற்றேன் :
கூனுடலும் குழிந்த விழிக்
குறுகு நெஞ்ச மனிசக்
குரங்கருக்குச் சொல்லுகின்றேன் :
வரம் கொடுப்பாள் அன்னை!
ஊனுடையும், உள்ளம் எனும்
ஓய்வில்லாக் களரும்,
உலகம் எல்லாம் மறந்திடுவீர் ;
ஓங்கும் உயிர்ப் பேறு!

5

வெளிப் பகைகள் வெட்டிவிட்டால்
உள் அமுதம் விளங்கும் :
விச்சை எலாம் வரும் பழைய
இச்சை எலாம் போக்கில் :
களிப்புடைய ஜீவன் எழில்
காணவெனில் தேகக்
கந்தல் விட்டு நெஞ்சம் எனும்
கருக்கிருட்டு முட்டை

ஒளித்துணர்வை உயிரொடுக்கி
உன்மத்தம் கொண்டால்,
ஓங்கு தவத்தால் ஆன்மப்
பாங்கு வளர்ந் தாடும்;
துளித்தனையும் புறமில்லாத்
தூக்கத்து ஆழ்ந்திடுவீர்;
தூய பெரும் ஜோதி உமை
மாய நடம் பார்ப்பீர்!

6

அகப் புறமும், புறப் புறமும்,
அகம் புறமும், யாவும்
அகமாக அகத் தகமாய்
அகத் தகத்துக்கு அகமாய்,
புகப் புக ஓர் ஞான வெள்ளம்
பொங்கி வழிந்து ஓடும்:
புன்மை எலாம் நன்மை செய்யும்
போத நதி ஊடு,
ஜகத் தழகு நும் அழகாய்,
ஜகத் துயிர் நும் உயிராய்,
ஜகத் தலைவன் நீராவீர்!
தேவர் எலாம் புகழச்
சிகப்புடைய கருமேனித்
தெவி அவள் உம்மைத்
தெய்வீகப் பேரெழிலில்
மெய்யேக வைப்பாள்.

## மது - மது*

வாடி என் கண்ணே - மது உண்டு
வாழலாம் பெண்ணே!
கோடி இன்பங்கள் - இருக்குது
குளிர்ந்த பூங் காவில்.

வாசனை வீசும் - ரோஜா
மலர்களைச் சூடி
நேசமாய் அணைந்து - இருவரும்
நெஞ்சுற மகிழ்வோம்.

ஓய்விலாத துன்பம் - உலகம்
ஒழிவிலாக் கவலை,
பேயெனும் மனிசர் - வாழ்க்கைப்
பிழைகளும் வேண்டாம்.

அடிமைகள் அடிமைத் - தளைகளை
அணைப்பதில் மகிழ்வார்,
கொடிய வாணிபர்கள் - பண்டம்
கொண்டு விற்றிடுவார்.

நமக்கென்ன கவலை - உலகில்
நமக்கென்ன வேலை?
சுமக்க ஓர் சுமையும் - இல்லை,
சுகம் பெற வாராய்.

---

* பாரசீகப் புலவர் ஹபீஸ் பாடியவை.

இன்பமும் வேண்டோம் - உலகத்
துன்பமும் வேண்டோம் :
அன்பெனும் மதுவுள் - மூழ்கி
அகநிறைந் திடுவோம்.

ஈன உலகம் - போக
இச்சையின் வழியே
ஞானக் கிணற்றில் - ஊறும்
நல்லமுது உண்போம்.

எங்கிருந் தோமோ - உலகில்
ஏன் பிறந்தோமோ,
எங்கு செல்வோமோ - என்னும்
இழவுகள் வேண்டாம்.

விதியெனும் பழமைச் - சிக்கல்
விரித்திட வேண்டாம் :
பதியெனும் காதல் - மதுவுள்
பாய்ந்திடு வோமே.

மலர்களின் அரசி - ரோஜா
மலரது மலரும் :
மலர்ந்தது உதயம் - கீழ்த்திசை
மன்னனும் வந்தான்.

மதுவுண்டு வாழ்வோம் - காதல்
மதுவுண்டு வாழ்வோம் :
மதுவுணும் போதே - மரணம்
வந்திடில் போவோம்.

## வசந்தம்

1

*இதயத்து மலரும் இன்பமா மலர்கள்,*
*கிண்ணியில் மதுவின் க்ரீடக் கிளர்ச்சி,*
*பக்கலில் ஆசைக் காதலி படுக்கை,*
*வேறென் வேண்டும்? வேந்தனும் நிகரிலை!*

2

*நிலவினும் இரு விழி நிலவது பொழியும்,*
*கூந்தல் வாசனைக் கொள்ளையில் மற்றை*
*வாசனை கழிந்தன : வாசனை வேண்டேன்.*

3

*மதுவையும் வேண்டேன், நின் வாய் மதுவின்*
*மதுரமுன் மற்ற மதுவெலாம் கசக்கும்.*

4

*புகழால் என் பயன்? பொருளால் என் பயன்?*
*பொய்மை வாழ்க்கையின் பொம்மைகள் [எனக்கு என்?*
*நீயே என் புகழ், நீயே என் பொருள்,*
*நீயே வாழ்க்கை, நினக்கு நான் அடிமை!*

**5**

எனக்கு யாரும் நிகர் இலை, இன்பப்
பண்ணிசை வனம் எலாம் பாய்ந்து மயங்கும்,
கிண்ணி மதுவுள் உன் கண் ஒளி கண்டு
களித்தேன், ஆஹா, களித்தேன், களித்தேன்!

**6**

வசந்த விருந்து இது, வாழ்க, வாழ்க!

# காதல் தேன் *

1

உன் பெயர் அதுவே உலகின் பெயர் எலாம்,
உலகு எலாம் உண்ணுவது உன் மதுக் கிண்ணி.

2

ஒவ்வொரு யுகத்தும் ஒவ்வொரு வண்ண
[மாய்
உலகம் வாழ உன் முகம் காட்டுவாய்.

3

உன்னை அல்லால் உலகம் வேறிலை,
நீயே நாளுய் உலகம் வாழ்த்திளுய்.

4

அணு எலாம் நின்னுடை அமுதக் கள்ளால்
வெறி கொண்டு துள்ளும் வியப்பே உலகம்.

5

பொன்னை வேண்டேன், பொருளை வேண்டேன்,
மின்னி மறையும் புகழை வேண்டேன்,
காதலின் துன்பக் கனலை வேண்னேன்.

* அத்தர் பாடியவை.

6

அன்பின் விளக்கம் அதனை இதயக்
குகையில் ஏற்றுவாய் : குலவிய தழலில்
இன்பம் துன்பம் யாவும் எரிகவே.

7

இரவும் பகலும் இணைந்து கொஞ்சும்
நேரம் போன்றது மனிதனின் நெஞ்சம் :
நெஞ்சக் காரிருள் நீங்கிட உதய
வெளிச்சம் வெளிப்படில் விடுதலை பெறலாம்.

8

மதுவை வேண்டினாய், மகிழ்ச்சி வேண்டினாய்,
மது நீ, மதுவின் மகிழ்ச்சி நீ, - அறியாய்!
கையகக் காசைக் கடன் எனக் கொண்டாய்.

9

அரசன் நீ, ஐயோ, ஆண்டியின் வேஷம் ஏன்?
பொக்கிஷம் நினது, பிச்சை புகுவது ஏன்?

10

உள்ளம் என் காதலன் ஒளியின் உதயம்,
காதலன் வரவைக் காக்கும் தனி இடம்.

11

உலகு எலாம் இதயக் கிண்ணியில் உண்ணும்,
அண்டமும் அகண்டமும் இதயத்து அகலம்.

12

பொய்மையை உண்மை செய் புதுமை காதல்,
கட்டுகள் உடைத்துக் கவின் பெறல் காதல்.

13

இன்பம் வேண்டித் துன்புறல் அறிவு,
துன்பம் வேண்டி இன்புறல் அன்பு.

14

காதலில் படைத்தான் காசினி எல்லாம்,
காதலின் விளக்கமே காசினி விளக்கம்.

15

காதலே உயிராம், காசினி உடலம்,
உயிர் இலா உடலால் உறு பயன் யாதோ?

16

மலரும் முள்ளும் ஒருமையின் மலர்ச்சி:
மலரே முள்ளாய்க் காண்பார் மன்னர்.

17

காதலே மதுவாம், காசினி கிண்ணி :
காசினிக் கிண்ணியில் காதலைப் பருகுவோம்.

18

அறிவு உலகத்து அமைவைத் தேடும்,
அன்பு உலகு செய் அவனைக் கூடும்.

## 19

அலைத் தொகை ஆழியை மறைப்பது போல
மாயைத் திரையுள் மகேசன் இருப்பான்.

## 20

இருப்பதும் இல்லதும் காதலின் இழைவு.
இருப்பதும் இல்லதும் கழிந்திடில் இன்பம்.

## 21

கடவுள் ஒளி, நாம் கடவுளின் நிழல்கள் ;
ஒளியே நிழலாம் உண்மை அறிந்தேன்

# காசில்லாக் கனகரத்னம்

1

வெய்யில் படபடக்கும்,
வெப்பம் கொழுந்துவிடும்,
நெய்யில் நெருப்புருக்கும்
தார்போட்ட நெடு வீதி,
இருபுறமும் மச்சு ம்ச்சாய்க்
கட்டிடங்கள் எத்தனையோ,
ஒருமனிதன் தங்குதற்கோர்
ஒதுக்குப் புறமில்லை,
காரோடும், ட்ராமோடும்,
கானல் அலையோடும்,
நீரோடும் பைப்பில்லை
நிழலோடாச் சென்னையிலே.

2

என்றைக்கோ நன்றாய்
இருந்தானும்; ஆனாலும்,
இன்றைக்கோ இவனைப் போல்
இடுக்குடையார் யாருமில்லை.
கையில் குடையுமில்லை;
காலுக்குச் செருப்பில்லை,

பையில் பணமில்லை,
பசிக்குப் பருக்கையில்லை.
மேலோடும் வேர்வையினில்
மிதந்தோடும் மேல் சட்டை,
காலா வதியான
கந்தலிலே பஞ்சகச்சம்,
பஞ்சடைந்து பாசடைந்த
பாழ்ங் கிணறு போல் குழிக்கண் ;
புஞ்சிரிப்புக் காணாத
பொக்கை வாய், புழைக் கன்னம்,
கீற்றுவிட்ட நெற்றி,
கிறுக்கிவிட்ட கோணல் முகம்,
நால் திசைக்கும் பொடி நாற்றம்
நாறு புனல் மூக்கோட்டை,
தோலிருக்கச் சுளை முழுங்கும்
சூரன் போல் வறுமைப் பேய்த்
தோலிருத்தித் தசை முழுங்கச்
சுக்காகிப் போன உடல்,
முட்டியிடும் கால்கள்,
முறுக்குவிடும் முட்டியெலாம்,
பட்டினியாம் பாழ் வயிறு
பாதாளம் பார்த்து வரும்.

3

வீட்டில் மனைவி கர்ப்பம்,
விளையாட்டுக் கைக்குழந்தை
நீட்டிப் படுத்துவிட்டான்,
நெஞ்சுக்குள் ஆபத்தாம்!

மொட்டச்சிமார் நால்வர்,
மூளிப் பெண் மூவருக்குக்
கட்டத் துணியில்லே,
கண்ணுலம் காத்திருப்பார்,
மூத்த பெண் வீட்டோடே,
மோகனத்துக்கு அவள் கணவன்
வார்த்தைக்குத் தக்கபடி
வரிசையெடுக் காமையினுல்.
அன்றுடம் நாலு பணம்
அகப்பட்டால் சோறுண்டு,
என்றுகிலும் கிடைக்கும்
இலேபோட்ட சாப்பாடு.
பாவிமகன் பிள்ளேகட்குப்
பாடம் சொல்லி வாராளுைம்,
மூவிரண்டு ரூபாய்க்கு
மோசமில்லே மாசத்தில்!
என் செய்வான் ஏழை!
இரு காலும் தள்ளாடப்
பன்முறை ஆபீஸ்கள்
பல பலவும் போய் வந்தான்,
இரவல் பேப்பரில் 'தேவை'
என்னென்னவோ கண்டான்,
இரவல் காகிதம் வாங்கி
எவ்வளவோ விண்ணப்பம்
எழுதிஞன் : என்றுலும்,
எழுதியதுதான் மிச்சம்
தொழுதான், பல்லிளித்தான்,
தோத்திரித்தான், பணக்காரர்

நெஞ்சம் இளகவில்லை
‘நீட்டு கம்பி!’ என்றுரைத்தார்
‘பஞ்சை இவன் பூமிக்குப்
பாரம்’ எனச் சொல்லிவிட்டார்.
காலியில்லை வேலை,
காலியிருந்தால் லஞ்சக்
கூலிக்குக் காசில்லை,
கொடுக்கச் சிநேகரில்லை,
பகல்பகதூர் ராப்பகதூர்
பட்சமிவன் பாலில்லை,
அகல உலகத்து இவனை
ஆதரிப்பார் யாருமில்லை.
பேர் பெத்தப் பேர்தான்,
கனகரத்னப் பெரும் பேராம்
ஊர் சுற்றும் நாய்க்கேனும்
எச்சில் உணவுண்டு,
பஞ்சைப் பார்ப்பான் ஏழைப்
பரதேசிக்கு அதுவுமில்லை.
நெஞ்சம் கொதிப்பேற,
நினைவெல்லாம் தற்கொலையின்
மீதேறச் சென்னைநகர்
வீதியெல்லாம் சுற்றுகிறான்.
காசினிக்குக் கருணையில்லை,
கடவுளுக்குக் கண்ணில்லை,
சீ சீ! சமூகத்தின்
சிறுமைகளுக்கு எல்லையில்லை!

## அனுபந்தம்

1 மூசா - மூசா நபி. மனு ஸ்மிருதி செய்தது போல் யூதர்களுக்குச் சட்டம் அமைத்துக் கொடுத்த ஞானி. இவர் பத்துக் கற்பனைகளைக் கல்லில் எழுதிவைத்திருந்தார். பின்னுல் ஆபிரகாம் என்பவர் அந்தக் கல்லைத் தேடி எடுக்கச் சென்ற பொழுது, ஒரு மலையில் ஒரு புதர் தீப்பட்டு எரிவதையும், அதன் நடுவே மூசாவின் கை தெரிவதையும் கண்டு, அவற்றின் மூலம் கற்பனைகள் பொறித்த கல்லைக் கண்டுபிடித்ததாகச் சொல்லப்படுகிறது.

2. ஏசு - கிறிஸ்துநாதர். சிலுவையில் மரித்த பின், மூன்ரும் நாள் கல்லறையிலிருந்து அவர் மீண்டும் உயிர்த்து எழும்பியதாக விவிலிய வேதம் கூறும்.

3. இராம் - ஒரு பாரசீக மன்னன். பர்தூஸீ என்ற பாரசீகக் கவி இவனைப்பற்றிப் பாடியிருக்கிருர்

4-5. ஜமஷ்ட் - ஒரு பாரசீக மன்னன். இவனுடைய நீதி சபை புகழ்பெற்றது. இவனிடம், அக்ஷயபாத்திரம் போல், திராட்சரசம் வற்ருத ஓர் எழு வளைய கோப்பை இருந்ததாகவும், அதில் உற்று நோக்கிஞல் முக்காலத்து விஷயங்களும் புலஞகும் என்றும் கதை உண்டு.

6. தாவூது - ஓர் இஸ்ரவேல் அரசன். விவிலியத்தில் இவன் வரலாறு காணப்படும்

7. நைஸாப்பூர் - புகழ்பெற்ற பாரசீக நகரம். 'ருபயாத்' பாடிய உமர் கயாம் அவர்களின் சொந்த ஊர் இது.

8. பாபிலோன் - பண்டைப் புகழ்பெற்ற நகரங்களுள் ஒன்று. யூப்ரடீஸ் நதிக்கரையில் உள்ளது.

9. கைக்பாட் - ஒரு பாரசீக மன்னன்.

10. கொசுா் - கைக்கோ கொஸ்ரு என்று சொல்லப்படும் மற்றொரு மன்னன்.

11. ரூஸ்தம் - பலம் பொருந்திய ஒரு பழைய வீரன்.

12. ஸால் - இஸ்ரவேல் நாட்டு மன்னன்.

13. ஹதீம் - ஹதிம் டாய் என்றும் அழைக்கப்படுவான். பெரிய தீர்க்கதரிசி. அரசனுயிருந்து துறவு பூண்டவன். இதனல் 'ஆண்டி - அரசன்' என்றும் பெயர் ஏற்பட்டது.

14. மாமூத் - இஸ்லாம் மதஸ்தாபகரான நபிகள் நாயகம்.

15. பஃரம் - புராணக் கதையில் நக்ஷத்திரமாக வர்ணிக்கப்படும் ஒரு வேடன்.

16. ஸீஸர் - ரோமாபுரியின் சாம்ராட்டுகளுக்குரிய பட்டப் பெயர்.

17. சூபி - தீர்க்கதரிசியும் தத்துவ ஞானியுமான ஒரு மகான்.

